# தப்லீக் ஜமாஅத்

## ஓர்

# நடமாடும் மதரஸா

எம்.எஸ்.எம். முஸ்ஸம்மில்

வெளியீடு
அர்கம் பப்ளிஷர்ஸ்
கொழும்பு

## அல்ஹம்துலில்லாஹ்...

**எம்.எஸ்.எம். முஸ்ஸம்மில் எழுதி**

**இதுவரை வெளிவந்திருக்கும் நூற்கள் :-**

- இலங்கை தப்லீக் ஜமாஅத் தந்த
  பெரிய அமீர் சாஹிப்
- சரித்திரம் கண்ட தப்லீக்
- பெரிய அமீர் சாஹிபின்
  கதைகளும் கார்குஸாரிகளும்
- தப்லீக் ஜமாஅத் ஓர்
  நடமாடும் மதரஸா
- அல்லாஹ்வின் பாதையில்
  கண்டதும் கேட்டதும் (முதல் பாகம்)
- முத்துக்குவியல்



## இன்ஷா அல்லாஹ்...

**விரைவில் வெளிவர இருப்பவை :-**

- எதிரும் புதிரும்
- சீன நாட்டில் ஒரு சில்லா
- அல்லாஹ்வின் பாதையில்
  கண்டதும் கேட்டதும் (இரண்டாம் பாகம்)

புத்தக எண். 46

## தப்லீக் ஜமாஅத்

## ஓர்

# நடமாடும் மதரஸா

எம்.எஸ்.எம். முஸ்ஸம்மில்




பேகம்பூர் - Po
திண்டுக்கல் - 624 002

வெளியீடு

அர்கம் பப்ளிஷர்ஸ்

59, ஸ்ரீ விபுலசேன மாவத்தை

கொழும்பு 10 ஸ்ரீலங்கா

# THABLEEG JAMA'ATH
# OAR
# NADAMADUM MADHARASA

(TAMIL)

(COPY RIGHT RESERVED)

WRITTEN BY

M.S.M. MUZAMMIL

PUBLISHED BY

ARQAM PUBLISHERS

59, Sri Vipulasena Mawatte, Colombo 10 Sri Lanka

DISTRIBUTORS IN TAMIL NADU

**BASHARATH PUBLISHERS**

83, Angappa Naicken Street, Chennai-600 001. PH : 044-2522 5028

HADHYA : SRI LANKA Rs. 75/-

HADHYA : INDIA Rs. 25/-

# பொருளடக்கம்

# பதிப்புரை

எல்லாம் வல்ல அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்து புகழும். அல்ஹம்து லில்லாஹ்!

அர்கம் பதிப்பகத்தின் சார்பில் **தப்லீக் ஜமாஅத் ஓர் நடமாடும் மதரஸா** என்ற இந்த அருமையான நூலை வெளியிடுவதில் மகிழ்ச்சியை காண்கிறோம்.

மனித சமுதாயத்தின் சுபிட்சத்திற்கும் அதன் உரிமைகளை பாதுகாப்பதற்கும், தீமைகளை அகற்றி எல்லா நிலைமைகளிலும் எல்லா துறைகளிலும் நன்மையை நிலைநாட்டுவதற்கும் படைத்த நாயனால் தனக்கு தரப்பட்டிருக்கும் முழு ஆற்றலைக் கொண்டு தனது சொல்லாலோ செயலாலோ பாடுபடுவதை ஒவ்வொரு முஸ்லிமும் தன் வாழ்க்கை நெடுகிலும் முக்கிய ஒரு கடமையாக ஆக்கிக் கொள்வதை அவசியம் எனக் கருத வேண்டும்.

அந்த வகையிலேயே நாம் சில முயற்சிகளில் ஈடுபடத் தொடங்கி ஆரம்பமாக ஹாஜி எம்.எஸ்.எம். முஸ்ஸம்மில் எழுதியிருக்கும் இந்த நூலை வெளியிட முன்வந்தோம்.

அற்புதமாக அமைந்திருக்கும் இந்த படைப்பில் தப்லீகுடைய உழைப்பில் ஈடுபாடுள்ளவர்களுக்கும் படிப்பினைகள் உண்டு, ஈடுபடாதவர்களுக்கும் படிப்பினைகள் உண்டு.

எனவே நாமும் படித்து அடுத்தவர்களையும் படிக்கத் தூண்டி பயன் பெறுவோமாக!

நன்றி

அர்கம் பப்ளிஷர்ஸ்

கொழும்பு

2007-10-01

# முகவுரை

*அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு ஆரம்பம் செய்கின்றேன்.*

தங்கள் கைகளில் தவழ்ந்து கொண்டிருக்கும் **"தப்லீக் ஜமாஅத் - ஓர் நடமாடும் மதரஸா"** என்ற இந்த நூலை எழுதுவதற்கு ஆற்றலை தந்துதவிய வல்லவன் அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்து புகழும், அல்ஹம்துலில்லாஹ்!

மதரஸா என்பது ஒரு அரபிச் சொல். பயிலகம் என்பது அதன் நேரடிப் பொருள். அல்குர்ஆனினதும், அல்ஹதீஸினதும் போதனைகளுக்கமைய இஸ்லாமிய கொள்கை விளக்கங்கள், ஷரீஅத் சட்டதிட்டங்கள், ஒழுக்க நடைமுறைகள், பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகிய பாடங்களைக் கொண்ட மார்க்கக் கல்வியே மதரஸாக்களில் கற்றுக் கொடுக்கப்படுகின்றன. இதற்கு நிரந்தரமான ஒரு இடமும் கற்றறிந்த ஆசான்களின் உதவியும் தேவை.

ஆனால், இவ்வாறான நிரந்தரமான இடமோ, பிரத்தியேகமான அமைப்பில் ஆசான்களோ இல்லாத நிலையிலும் உலகம் பூராவும் இன்றைய காலங்களில் அற்புதமான அமைப்பில் மதரஸாக்கள் நடைபோட்டு வருகின்றதை கண்டு வருகின்றோம். அதாவது, ஊர் ஊராக, நாடு நாடாக பிரயாணங்களை மேற்கொண்டு நல்லவைகளை கற்றறிந்து கொள்வது, அவைகளை தமது வாழ்வின் நடைமுறைகளில் எடுத்து நடக்க பயிற்சிகளில் ஈடுபடுவது, அடுத்தவர்களுக்கு இவைகளை எத்தி வைப்பதுடன் அவர்களையும் இப்பணியில்

ஈடுபட அழைப்பு விடுப்பது இவ்வாறான நல்நோக்கத் துடன் தஃவத் தப்லீக் என்ற பெயரில் ஈமானுடைய உழைப்புக்காக அல்லாஹ்வின் பாதையில் பாடுபட்டுக் கொண்டிருக்கும் ஜமாஅத்தினர்களையே நடமாடிக் கொண்டிருக்கும் மதரஸா என்று கூறுகின்றோம்.

இன்றைய காலத்தில் நூற்றுக்கும் அதிகமான நாடுகளில் ஈமானுடைய மேலான இந்த உழைப்பில் முஸ்லிம்களில் அதிகமானவர்கள் ஈடுபட்டு வருவது முஸ்லிம்களுக்கு தெரியாத விடயமல்ல. இதன் காரணத்தினால் இதில் ஈடுபட்டுக் கொண்டிருக்கக் கூடியவர்கள் அடைந்து வருகின்ற பலாபலன்களைப் பற்றி எழுதி முடிப்பதென்றால் அது இலேசான ஒரு விடயமுமல்ல. எனினும் மாதிரிக்காக சிறிய ஒரு முயற்சியில் ஈடுபட்டதினால் இந்த நூல் உருவாகி வெளிவரக் காரணமாக அமைந்து விட்டது.

சின்ன சின்ன விடயங்களை மாத்திரம் கருத்தில் கொண்டு உருவாகியிருக்கும் இந்த படைப்பை படித்துப் பார்ப்பதுடன் அடுத்தவர்களையும் படிக்கத் தூண்டுமாறு உங்களின் நல்லாதரவையும் நாடி நிற்கும்,

கொழும்பு நன்றியுள்ள ஊழியன்

2007-09-28 எம். எஸ்.எம். முஸ்ஸம்மில்

கொழும்பு இஹ்ஸானிய்யா அறபிக் கல்லூரியின் ஸ்தாபகப் பணிப்பாளரும், எனது நேசத்திற்கும் மதியாதைக்குமுரிய

மௌலானா நியாஸ் முஹம்மது அவர்கள்

மனமகிழ்வுடன் வழங்கிய

# வாழ்த்துரை

எல்லாப் புகழும் வல்லவனாம் அல்லாஹ் ஒருவனுக்கே, அல்ஹம்துலில்லாஹ்!

ஸலவாத்தும் ஸலாமும் சாந்தி நபி முஹம்மத் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதே.

எனது பிரிய நண்பர் ஹாஜி முஸ்ஸம்மில் ‘‘தப்லீக் ஜமாஅத் ஓர் நடமாடும் மதரஸா’’ எனும் தலைப்பில் எழுதிய சிறிய நூலை பார்த்தேன், படித்தேன், பரவசமடைந்தேன். அதனால் இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கத் துணிந்தேன்.

இல்மு எனும் அறிவை அமுதாக வழங்கும் தளங்கள் மதரஸாக்கள். தளங்கள் அமையும் வரை அதை வழங்க காத்திருப்பது ஒரு வகை காலத்தை வீணாக்கும் செயல் மாத்திரமல்ல அது ஓர் அமானிதம் எனும் நம்பிக்கையை மறைக்கும் துரோகச் செயலுமாகும்.

இப்போதெல்லாம் மனிதர்களின் தேவை அறிந்து அவர் களின் இடம் தேடிச் சென்று சேவை வழங்கும் காலம். நாட்டின் ஜனாதிபதியின் சேவைகளைக்கூட ‘‘ஜனாதிபதி நடமாடும் சேவை’’ என்ற பெயரிலும், தேசிய அடையாள அட்டைகளை அவசரமாக மக்களுக்கு வழங்குவதில் தளம் தேடி வரும் வரை காத்திராமல் ‘‘அடையாள அட்டை விநியோகம் நடமாடும் சேவை’’ என்றெல்லாம் நடமாடிக் கொண்டே சேவையை வழங்கும் போது ‘‘சமயக் கல்வி நடமாடும் சேவை’’ என்றொன்று நடைபெறுவது பொருத்தமல்லவா?

இதையே ஆசிரியர் ‘‘தப்லீக் ஜமாஅத் ஓர் நடமாடும் மதரஸா’’ என பொருத்தமாக பெயரிட்டுள்ளார். வாழ்த்தாமல் இருக்க முடியுமா? வாழ்த்துக்கே தகுதியற்றவர்களை

வாழ்த்தும் காலம் இது. நபிமொழி அதை மறுமையின் அடையாளம் என எச்சரித்துள்ளது. ஆனால் நான் வாழ்த்துரை வழங்குவது தகுதியான தலைப்புடன் பதினொரு சிறிய தலைப்புகளில் ஒரு சிறிய அறிவாலயம் நடமாடுவதை ஆசிரியர் அறிமுகம் செய்ய முனைந்த விதம் வாழ்த்தப்பட வேண்டியது என்பதனாலேயே.

மதரஸா என்பது அதன் தரம் தரம்தான், சந்தேகமில்லை. ஆனால் அங்கு கற்றதையும் பெற்றதையும் இங்குதான் செயல்படுத்தவும், பெற்றுக் கொண்ட அறிவை அமுதாக அடுத்தவருக்கும் வழங்க கிடைக்கிறது என்ற உண்மையையும், கற்றவை சில மீண்டும் நினைவுக்கு வர காரணமானது இந்த நடமாடும் தப்லீக் ஜமாஅத் மதரஸாவின் மூலம்தான் என்பதையும் எவராலும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது. தப்லீகில் அலைந்து திரியும் ஆயிரக்கணக்கானோர் ஆயிரக்கணக்கான மஸாயில்களை அறிந்ததே அதன் தஃலீமின் வட்டத்திலிருந்து என்பது தெட்டத் தெளிவு. ஆசிரியர் முன்னுரையில் அன்புடன் வேண்டிக் கொண்டது போல இந்நூலை கடைசி வரை படியுங்கள், அதன் மூலம் செயல்பட வாருங்கள் என படிப்போரையும் வாழ்த்தி அழைக்கிறேன்.

02.03.2007 டில்லி நிஸாமுத்தீன் தப்லீக் மர்கஸில் நடந்த இலங்கை தப்லீக் ஜமாஅத் ஊழியர்களின் தர்பியத் கூட்டத்தில் மரியாதைக்குரிய ஸஃது மௌலானாவின் உரையில் இஸ்லாமிய எழுத்தாளர், அவனும் ஒரு தாஇயே, அவனின் முயற்சியும் தஃவத்தின் ஓர் அங்கமே, எனவே எழுத்தாளன் ஒருவனைக்கூட தாழ்த்தி எடைபோடக் கூடாது என்ற அறிவுரை இந்த வாழ்த்துரைக்கு துணிவை தந்தது.

கொழும்பு

01.10.2007

மௌலவி

S. நியாஸ் முஹம்மது

# 1. தப்லீக் ஜமாஅத் ஓர் நடமாடும் மதரஸா

அருள் மறையாம் அல்குர்ஆனினதும் அண்ணலெம் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களின் சொல், செயல்களினதும் பிரகாசம் நிறைந்த வெளிச்சத்தின் அடிப்படையில் சன்மார்க்க சட்டதிட்டங்களை விளக்கப் படுத்தி கற்றுக் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் அமைப்பே மதரஸா என்ற பெயரை தாங்கி நிற்கின்றது.

மதரஸா எனும் போது அதற்கென நிரந்தரமான ஒரு இடமும் கற்றுக் கொடுப்பதற்கு கற்றறிந்த ஆலிம்களின் உதவியும் தேவை.

அத்தகையதோர் அமைப்பில் தம்மை உட்படுத்தி பயன் பெறுவதற்கு பொதுவாக ஒரு வயதெல்லை இருக்கிறது. அவ்வயதெல்லையை தாண்டி தொழில் வியாபாரம் போன்ற அத்தியாவசிய அலுவல்களிலும் துன்யாவுடைய ஏனைய விவகாரங்களிலும் ஈடுபடத் தொடங்கி திருமணம் செய்து கொண்டு குடும்பமும் குடித்தனமுமாகிவிட்ட பிறகு மதரஸாக்களில் சேர்ந்து மார்க்கக் கல்வியை தேடுவ தென்பது இலகுவான ஒரு காரியமல்ல.

எனினும் அப்படியானவர்களுக்கு கைகொடுத்துதவும் வகையில் அமையப் பெற்றிருக்கும் அற்புதமானதொரு அமைப்புதான் இன்றைய காலங்களில் தஃவத் தப்லீக் என்ற பெயரில் பார் பூராவும் பவணி வந்து கொண்டிருக்கும் பரக்கத் பொருந்திய மேலான ஈமானுடைய உழைப்பாகும்.

முபாரக்கான ஈமானுடைய இத்தகைய உழைப்புத்தான் அறியாமையில் மூழ்கி அருவருக்கத்தக்க அசிங்கமான அட்டூழியங்கள் நிறைந்த வாழ்வில் பழகிப் போயிருந்ததின் காரணத்தினால் உதவாக்கரைகள் என்று அன்றைய காலத்து ஆட்சியாளர்களால் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த

வர்களை கியாமத் நாள் வரும் வரை வரவிருக்கும் அனைத்து மனித கோடிகளுக்கும் வழிகாட்டும் ஒளிவிளக்கு களாய் சர்தாரே ஆலம் எங்கள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களின் அயராத முயற்சியின் பயனாய் சமைய வைத்து அவர்கள் ஒவ்வொருவரும் வானத்தில் மின்னக்கூடிய நட்சத்திரங்கள், அவர்களில் யாரை பின்பற்றினாலும் நேர்வழியை கண்டு கொள்வார்கள் என்ற கருத்தை அதே வள்ளல் நபி (ஸல்) அவர்களின் அமுத வாயால் வாயாற போற்றிப் புகழப்படும் அளவுக்கு அல்லாஹ் அந்த சங்கைமிக்க ஸஹாபா பெருமக்களை உயர்த்தி வைத்தான்.

இன்றைய காலத்தில் நடைபெற்று வருகின்ற தஃவத் தப்லீக் என்கின்ற ஈமானுடைய உழைப்பின் அசல் நோக்கம் இதில் தம்மை ஈடுபாடுள்ளவர்களாக ஆக்கிக் கொள்ளும் ஒவ்வொருவரும் எவ்வித முயற்சியும் இல்லாமல் அருள் நிறைந்த அல்லாஹ்வின் கிருபையால் சன்மானமாக, இனா மாக கிடைத்திருக்கும் தத்தமது ஈமானை சீர் செய்வதும் பாதுகாப்பதும் வளர்த்து பெருக்கிக் கொள்வதுமேயாகும்.

ஆம் - இது ஒரு ஈமானுடைய உழைப்பாகும். ஈமானை படிப்பதற்காகவும், படித்தவற்றில் குறைகள் எதுவும் இருப்பின் அதனை திருத்தி சரி செய்து சீர்படுத்திக் கொள் வதற்காகவும், அதனை வளர்த்துக் கொள்வதற்காகவும், அதனை பாரெல்லாம் பரப்புவதற்காகவும் செய்யப்படுகின்ற உயர்ந்ததோர் உழைப்பாகும்.

முஸ்லிமாக பிறந்த புண்ணியவான்கள் அல்லது இடையில் இஸ்லாத்தை தழுவி முஸ்லிம்களாக ஆகிக் கொண்ட பாக்கியவான்கள் எதையும் படிப்பதற்கு முன்பதாக முதலில் ஈமானையே படித்தாக வேண்டும் என்பது அதிமுக்கியதோர் ஷர்த்தாகும். அதனாலேயே ''நாங்கள் முதன் முதலாக அல்லாஹ்வின் உபதேசங்களின் மீது

நம்பிக்கைக் கொள்வதை (ஈமானை) கற்றோம். அதன் பின்னரே குர்ஆனைக் கற்றோம்'' என்ற கருத்தை சங்கை மிக்க சஹாபா பெருமக்கள் சொல்லிக் காட்டியிருக்கிறார்கள்.

ஈமான் என்று சொல்லும் பொழுது இபாதத்தைக் கொண்டும் மார்க்கத்தில் சொல்லி வைக்கப்பட்டிருக்கும் மற்றுமுண்டான செயல்பாடுகளைக் கொண்டே ஒரு ஈமான் தாரியை அடையாளம் கண்டு கொள்ள முடியும். ''ஒருவரை தொழுகைக்காக பள்ளிவாயலை நோக்கி செல்லக்கூடிய பழக்கமுடையவராக இருக்கக் கண்டால் அவர் ஒரு ஈமான் தாரி என்று சாட்சி சொல்லுங்கள்'' என்ற நபிமொழிகளில் காணக்கிடக்கின்ற கருத்தை இக்கூற்றுக்கு ஆதாரமாக குறிப்பிட முடியும்.

எனவே ஈமானில்லாமல் இபாதத்தோ இபாதத்தில்லாமல் ஈமானோ இல்லை. அதே சமயத்தில் இல்மில்லாமல் ஈமான் உண்டாகவும் முடியாது. ஈமானில்லாத இல்மிலும் பிரயோஜனம் ஏற்படப் போவதில்லை. இபாதத்தில்லாத இல்மிலும் பிரயோஜனத்தை காண முடியாது. இல்மின் உதவியைக் கொண்டே இபாதத்தை சீர்செய்ய வேண்டி இருக்கிறது.

ஆக, ஈமான், இல்ம், இபாதத் இவை மூன்றுக்கும் இடையில் ஒன்றுடன் ஒன்றுக்கு நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டியதன் அவசியத்தால் ஈமானுடைய உழைப்பிற்காக ஒரு வருடம், ஆறு மாதங்கள், நான்கு மாதங்கள், நாற்பது நாட்கள், பத்து நாட்கள், மூன்று நாட்கள் என்ற அடிப்படையில் தமது கால நேரங்களை ஒதுக்கி அல்லாஹ்வின் பாதையில் பிரயாணங்களில் ஈடுபடும் காலங்களில் இம்மூன்று அம்சங்களிலும் கூடிய கவனம் செலுத்தும் வகையிலேயே தப்லீகுடைய வேலைத் திட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இதன் காரணத்தினால் தஃவத் தப்லீக் என்கின்ற ஈமானுடைய உழைப்பில் ஈடுபடக்கூடிய காலங்களில் ஒவ்வொருவரும், அவர் படித்தவராகவோ அல்லது படிப்பறிவில் குறைந்தவராகவோ, இளையவராகவோ அல்லது முதியவராகவோ, புதியவரோ அல்லது பழையவரோ எந்த தராதரத்தை சேர்ந்தவராயிருப்பினும் சரியே ஒவ்வொரு தடவையும் ஏதாவது ஒரு பாடத்தை யாவது படித்து பயன் பெறும் வாய்ப்பை பெற்றுக் கொள்பவராகவோ அல்லது தம்மிடத்தில் குடிகொண் டிருக்கும் சின்னஞ்சிறிய ஒரு தவறையாவது திருத்திக் கொள்ளும் சந்தர்ப்பத்தையோ பெற்றுக் கொள்ளாமல் இருப்பதேயில்லை. அந்த அளவுக்கு இது சிறப்புப் பொருந்திய அமைப்பில் அமைந்திருக்கும் அற்புதம் நிறைந்ததோர் உழைப்பாகும். அதனாலேயே தீனுடைய இந்த உழைப்பை நடமாடும் மதரஸாவென்றும், நடமாடும் பல்கலைக்கழகமென்றும் அவரவர்களுடைய அனுபவத் திற்கேற்ப அனுபவசாலிகள் விமர்சனம் செய்து கொள்வதுண்டு.

இங்கே ஈமானுடைய பாடம் மாத்திரமல்லாது இபாதத், முஆமலாத், முஆஷராத், அஹ்லாக் ஆகிய அனைத்து அம்சங்களைப் பற்றிய இல்மையும் படிக்கலாம்.

இவைகளை போதிப்பதற்கென்று விஷேசமாக எவரையும் ஆசான்களாக நியமித்து அல்லாஹ்வின் பாதையில் ஜமாஅத்துகள் புறப்படும்போது அனுப்பி வைக்கப்படுவதில்லை. ஆனால் ஒவ்வொரு ஜமாஅத்திலும் அமீர் என்ற அமைப்பில் பொறுப்புதாரி ஒருவர் இருப்பார். இன்றைய காலங்களில் ஆலிம்களும் அதிகமாக ஜமாஅத்துகளில் இணைந்து போகும் நிலைமை உருவாகி இருப்பதன் காரணத்தினால் அதில் சேர்ந்து போகக் கூடியவர்களால் கூடுதலான பலாபலன்களை கண்டு

கொள்ள முடிகிறது என்பதும் குறிப்பிடப்பட வேண்டிய விடயமாகும்.

என்றாலும், தமது கால நேரங்களை ஒதுக்கி ஜமாஅத்துகளில் இணைந்து போகக் கூடியவர்கள் எந்த தராதரத்தை சேர்ந்தவர்களாகயிருப்பினும் ஜமாஅத்தை பொறுத்த வரையில் அனைவரும் மாணவர்களே.

படிப்பதும் திருந்துவதும் என்பது முறைப்பிரகாரம் முயற்சித்தலிலேயே அமைந்துள்ளது. அதனாலேயே ஜமாஅத்துகள் வெளியாகும் பொழுது தமது கால நேரங்களை முறைப்பிரகாரம் பயன்படுத்திக் கொள்வதின் அவசியத்தை வலியுறுத்தும் பொருட்டு 'ரவான்கி' என்ற பெயரில் புத்திமதிகள் கூறி அனுப்பி வைக்கப்படுவதை கட்டாயமான ஒரு அமலாக தீனுடைய உழைப்பில் அமைத்து வைக்கப்பட்டுள்ளது. எனவே அமீருக்கும், மஷ்வராவுடைய முடிவுக்கும் இதாஅத் செய்து வழிபடுவதுடன் ரவான்கி என்கின்ற புத்திமதிகளின்படி செயல்படுவதும்தான் அனைவருக்கும் பாடம் படிப்பிக்கும் ஆசானாகும்.

தஃலீம், தஃலீம், இபாதத் ஆகிய அமல்களுக்கு அதிகமான நேரங்களை பயன்படுத்தும்படியும் உண்ணல், உறங்கல், வெளிவாசலுக்கு போதல் போன்ற அத்தியாவசிய தேவைகளுக்கு செலவழிக்கும் நேரங்களை குறைத்துக் கொள்ளும்படியும், தனக்குத் தேவையானதை தானே செய்து கொள்வதுடன் அடுத்தவர்களின் தேவைகளை செய்து கொடுப்பதில் அக்கறை காட்டும்படியும், ஆகுமான பேச்சாக இருந்தாலும் அதனையும் குறைத்துக் கொள்ளும் படியும், வீண் விரயம் செய்தல், அடுத்தவர்களின் பொருட்களின் மீது ஆசை வைத்தல், வாய் திறந்து யாசித்தல், அனுமதியில்லாது அடுத்தவர்களின் பொருளை

பாவித்தல் போன்ற செய்கைகளை முற்றாக தவிர்த்துக் கொள்வதில் கண்டிப்பாக இருந்து செயல்படும்படியும், புத்திமதிகளின் போது வலியுறுத்தி சொல்லி வைக்கப்படும் வழமையான அறிவுரைகளாகும்.

ஈமானுடைய உழைப்பின்போது படித்தவர், படிப்பறிவில் குறைந்தவர்கள், படிப்பறிவு அறவே இல்லாத பாமரர்கள், வசதி படைத்தவர்கள், வசதியில் குறைந்தவர்கள், ஆசிரியர்கள், ஆலிம்கள், மாணவர்கள், வியாபாரிகள், விவசாயிகள், தொழிலாளர்கள், உத்தியோகஸ்தர்கள், வைத்தியர்கள், வக்கீல்கள், இஞ்சினியர்கள் இப்படி பலதரப்பட்ட மக்கள் தங்களுக்கிடையில் எந்தவித ஏற்றத் தாழ்வுகளுக்கும் இடம் கொடுக்காது ஒன்றுவிட்ட சகோதரர்களைப் போன்று ஒன்று சேர்ந்து கூட்டம் கூட்டமாக, ஊர் ஊராக, நாடு நாடாக பயணம் செய்து பல்வேறு விதமான பயிற்சிகளில் ஈடுபட்டு அடைந்து கொண்டு வரும் பலாபலன்களைப் பற்றி முடிவைக் காண முடியாத அளவுக்கு சங்கிலித் தொடர்பு போன்று பந்தி பந்தியாக எழுதிக் கொண்டே இருக்க முடியும்.

வயது வந்து திருமணம் முடித்து பிள்ளைக்குட்டிகளை கண்டது மாத்திரமல்லாமல் பேரப்பிள்ளைகளையும் கண்டவர்களில் முழுக்கு என்றால் என்ன, அதனை எவ்வாறு நிறைவேற்றுவது, தொழுகையின் பர்ள், சுன்னத், ஷர்த், ஒளுவுடைய பர்ள், சுன்னத், அதனை முறிக்கக்கூடிய காரியங்கள் பற்றிய விபரங்களைக் கூட தெரிந்து வைத்திராதவர்கள் எத்தனையோ நபர்கள் ஜமாஅத்துகளில் வந்திருப்பதை சந்தித்திருக்கிறோம்.

படிக்காத பாமரர்கள் மாத்திரமல்லாது, படித்து பட்டம் பெற்று பெரும் பதவிகள் வகிக்கும் கண்ணியத்திற்குரிய கணவான்களாய் கருதப்படக்கூடிய பலரில் கூட இத்தகைய

குறைபாடுகள் இருந்ததை கண்டிருக்கிறோம். இப்படியான வர்களுக்கெல்லாம் நிச்சயம் நடமாடும் இந்த மதரஸாவானது ஒரு வரப்பிரசாதம் என்றே சொல்ல வேண்டும்.

இவ்வாறான சாதாரண விடயங்களைப் பற்றிய விளக்கம் கூட இல்லாதவர்களாக இருப்பார்களேயானால் அவர்கள் இன்னும் எவ்வளவு விடயங்களை விளங்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள் என்பதைப் பற்றி சற்று எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஒரு முஸ்லிமை பொறுத்தவரையில் அறிவு என்பது அவனது காணாமல் போய்விட்ட சொத்து என்று இஸ்லாத்தில் சொல்லப்பட்டு, அதனை கண்ட இடத்தில் எடுத்துக் கொள்வதற்கு அவனுக்கு உரிமை மாத்திர மல்லாது அது அவனது கடமையுமாகி விடுகிறது எனவும் வலியுறுத்தி கூறி வைக்கப்பட்டுள்ளது.

கல்விக்கு எல்லையென்று ஒன்று இல்லை. அதனால் தான் மாதாவின் மடி தொடக்கம் மண்ணறைக்குள் போய் சேரும் வரை கல்வியை கற்பதில் கவனம் செலுத்துபவர் களாக இருப்பதை ஒவ்வொருவரும் தங்களின் தலையாயக் கடமையாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தும் கருத்தை நபிமொழிகளில் காண்கிறோம்.

வயது வந்த ஒவ்வொரு முஸ்லிமும் மார்க்க அறிவை கற்றுக் கொள்வதில் ஆர்வம் காட்ட வேண்டியதைப் பற்றி இஸ்லாம் மிகவும் முக்கியத்துவத்துடன் வலியுறுத்து கின்றது. மார்க்க அறிவு என்பது மார்க்கத்தில் கூறப்பட்டுள்ள சில அனுஷ்டானங்களை சடங்காக செய்து கொள்வதற்கு தேவையான ஒன்று என்று கருதினால் அது தவறான ஒரு கருத்தாகும். ஒரு முஸ்லிம் தனது வாழ்வை நடத்திச் செல்ல, அதாவது நாளாந்த வாழ்வில் இடம் பெறும் உண்ணல், உறங்கல், உடுத்தல், மலஜலம்

கழித்தல், குளித்தல் போன்ற சின்னஞ்சிறிய சாதாரண செய்கைகள் முதல் வியாபாரம், தொழில், உத்தியோகம், திருமணம் போன்றவற்றுடன் ஆட்சி செய்யும் வரை அனைத்து விடயங்கள் பற்றியும் அறிந்து வைத்திருப்பதை அவசியமானதென அவன் கருத வேண்டும்.

அதாவது, இஸ்லாமிய ஷரீஅத்தில் சொல்லி வைக்கப் பட்டிருக்கும் நல்லொழுக்கம், நடை, உடை, பாவணை, பழக்க வழக்கம், நன்மையான விடயங்களை எடுத்து நடப்பதும், இதற்கு மாற்றமான விலக்கப்பட்ட தீமையான தவறான அனைத்து விடயங்களையும் தவிர்ந்து நடப்பதும் இதில் அடங்கும்.

எனவேதான், ஷரீஅத்தின் அடிப்படையில் அல்லாஹ் வினதும், அவனது ரசூலே கரீம் முஹம்மது (ஸல்) அவர் களினதும் பொருத்தம் தங்கிய நேர்வழியைப் பற்றிய அறிவை கற்றுக் கொள்வதும், அதனை அவர்களது வாழ் வில் முழுமையாக எடுத்து நடக்கும் வகையில் பயிற்சிகள் பெறுவதை நோக்கமாகக் கொண்டே நடமாடும் இந்த மதரஸா நடைபோட்டுக் கொண்டிருக்கிறது.

மார்க்க அறிவில் பின்தங்கிய வயது சென்றவர்கள் வக்து கொடுத்து ஜமாஅத்தில் சேர்ந்து செல்லும் காலங்களில் அவர்களுடன் வந்திருக்கக் கூடிய வாலிபர் களையும் மார்க்க விடயங்களில் விளக்கம் உள்ளவர் களையும் காணும் போதெல்லாம் வீணாக கழிந்துவிட்ட தமது கடந்த கால வாழ்க்கையைப் பற்றி கவலைப்பட்டு கைசேதமடைவதுண்டு. அந்தக் கவலை ஒரு வைராக்கி யத்தை உருவாக்கி தங்களின் குழந்தைகளுக்காவது மார்க்கக் கல்வியை ஒழுங்காக கற்றுக் கொள்ள வழியமைத்து கொடுக்க வேண்டுமென்ற உணர்வை உண்டாக்கி விட்ட நிகழ்வுகள் ஒன்று இரண்டல்ல.

எண்ணிக்கையில் அடக்க முடியாத அளவு அந்த உணர்வு வளர்ந்து விட்டதன் காரணத்தினாலேயே இன்று நமது ஸ்ரீலங்கா நாட்டில் நூற்றுக்கணக்கான அரபு மதரஸாக்கள் நடைபோட்டுக் கொண்டிருக்கும் கண் கொள்ளா காட்சியை கண்டு வருகின்றோம்.

தப்லீக் இலங்கையில் அறிமுகம் செய்யப்படுவதற்கு முன்னர் விரல் விட்டு எண்ணக்கூடிய அளவு நாலைந்து மதரஸாக்களே இயங்கி வந்திருக்கின்றன. தப்லீகுடைய அறிமுகத்திற்குப் பின்னரே ஒவ்வொரு ஊர்களிலும் மதரஸாக்கள் உருவாகத் தொடங்கின. அதன் காரண மாகவே இன்று ஆயிரக்கணக்கான ஆலிம்களும், ஆயிரக் கணக்கான ஹாபிஸ்மார்களும் உருவாகி நம் சமுகத்திற்கு வழிகாட்டும் ஒளிவிளக்குகளாக விளங்கி நிற்கும் பாக்கியமான சூழலை பார்க்கிறோம்.

என்றாலும், தப்லீக் என்கின்ற நடமாடும் மதரஸாவின் மகிமையை வெளியில் இருந்து பார்ப்பவர்களால் விளங்கிக் கொள்ளவே முடியாது. அறிவாளி என்று உலகம் பூராவும் ஒருவர் போற்றி புகழப்பட்டாலும், பட்டங்கள் பல பெற்று பாரினில் பவனி வந்தாலும், ஆராய்ச்சி செய்வதில் வல்லவர்களாக விளங்கினாலும், சிந்தனை சிற்பிகளாக சிறகடித்து பறந்தாலும் நிச்சயம் அத்தகையோர்களால் கூட இதனுள் அமைந்திருக்கும் அந்தரங்கங்களை முழுமையாக அறிந்து விளங்கிக் கொள்ள முடியுமென்று எண்ணினால் அது சாத்தியப்படக் கூடியதோர் காரியமல்ல என்பதை அறுதியிட்டு உறுதியாக சொல்லி வைக்க முடியும்.

எனவேதான், ஈமானுடைய உழைப்பிற்காக தமது சூழலை விட்டு வெளியேறிச் செல்வதின் சிறப்பினை அறிந்து கொள்வதற்கு தமது கால நேரங்களை ஒதுக்கி அல்லாஹ்வின் பாதையில் நேரடியாக தாமே ஒரு

தடவையாவது அந்த கூட்டத்தாருடன் ஒரு சில நாட்களுக்காவது இணைந்திருந்து அவதானிப்பதே ஒரே வழியாகும் என்று சொல்லி வைக்க விரும்புகிறோம். வெளியிலிருந்து பார்த்தே ஈமானுடைய இந்த உழைப்பில் பொதிந்திருக்கும் இரகசியங்களை தங்களால் விளங்கிக் கொள்ள முடியும் என்று எவராவது எண்ணினால் அது குருடர்கள் யானையைத் தொட்டுப் பார்த்து விளங்கிக் கொண்ட விளக்கத்தைப் போன்றுதான் இருக்கும்.

என்றாலும், அல்லாஹ்வின் பாதையில் அடியேன் சென்று வந்து கொண்டிருக்கும் காலங்களில் இடம் பெற்ற சில நிகழ்வுகளில் நினைவுக்கு வந்த சிலவற்றை தெரிந் தெடுத்து எழுதுவதன் மூலம் நடமாடும் இந்த மதரஸாவின் மகிமையை ஓரளவாவது விளங்கிக் கொள்ள முடியும், அல்லது இதன் உண்மையை விளங்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தின் மேலீட்டால் தாமும் இதில் இணைந்து ஒரு சில நாட்களுக்காவது போய்த்தான் பார்ப்போமே என்றெண்ணி அதற்காக தயாராகி விடலாம் என்ற எண்ணம் என் உள்ளத்தில் எழுந்து நின்றதால் உருவானதே ''தப்லீக் ஜமாஅத் - ஒரு நடமாடும் மதரஸா'' என்ற இந்த சிறு நூல் வெளிவரக் காரணமாக அமைந்து விட்டது.

சொல்வதற்கென்றால் பெரிய பெரிய விடயங்களை உள்ளடக்கிய சம்பவங்கள் ஏராளமாக இருக்கின்றன. ஆனால் அவைகளில் எதையும் நான் இங்கு தொட்டுப் பார்க்கவே இல்லை. மாறாக மிகச் சிறிய விடயங்களை, குறிப்பாக சின்னஞ்சிறிய தவறுகளை எடுத்துக்காட்டும் வகையில் அடியேனின் நேரடி அனுபவத்தில் இடம்பெற்ற சிலதுகளையும், முக்கியமான படிப்பினைகளையூட்டும் பாடங்கள் சம்பந்தமான நினைவில் நிற்கின்றவைகளுள் மாதிரிக்காக சில சம்பவங்களை மாத்திரமே தேர்ந்தெடுத்து இதில் இடம்பெறச் செய்திருக்கிறேன்.

ஒவ்வொன்றும் கவலையை உண்டாக்கக் கூடிய சம்பவங்களாக இருப்பதை வாசகர்களால் கண்டு கொள்ள முடியும் என்று கருதுவதால் சின்னஞ்சிறிய இந்த சம்பவங்களே தப்லீக் என்கின்ற நடமாடும் மதரஸாவின் மகிமையை எடுத்துக்காட்ட போதுமானதாகும் என்பது அடியேனின் எண்ணமாகும்.

சின்ன ஒரு தவறுதான் என்பதினால் பொதுவாக அனேகரிடத்தில் அது ஒரு தவறாகவே தெரிவதில்லை. ஆனால், எத்தகையதாயிருப்பினும் தவறென்பது தவறே தான் என்பதை மறந்து விடக் கூடாது; மறுத்து விடவும் முடியாது.

சின்னஞ்சிறு குறைகள் விடயத்தில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஏனென்றால் கப்பலில் ஏற்படும் சிறிய ஒரு ஓட்டைதான் அந்த கப்பலையே மூழ்கடிக்க காரணமாய் அமைகிறது.

அது போலவே அந்த சின்னத் தவறின் விளைவு சாதாரணமானதாக இருப்பதில்லை. அர்த்தத்தையே தலை கீழாக மாற்றியமைக்கும் வல்லமையையும் பாரதூரமான விளைவுகளையும் உண்டாக்கக் கூடிய சக்தியும் அந்தத் தவறுக்கு உண்டு.

அந்தத் தவறு அடங்கியிருக்கும் விடயத்தை ஞாபகப் படுத்தும் பொழுதும் ஒரு விடயத்தை பிறருக்கு படித்துக் கொடுக்க எத்தனிக்கும் பொழுதுதான் அந்த சின்னத் தவறையும் தவறென்று விளங்கி கொள்ளக்கூடிய சந்தர்ப் பத்தை சந்திக்க முடியும். ஓய்வு நேரங்களில் ஒருவரோ டொருவர் கலந்துறவாடி முதாக்கராக்களில் ஈடுபடும்போது தானாகவே அந்தத் தவறு வெளிப்படும் நிலைமை உருவாகி விடுவதுண்டு.

அப்படி இடம்பெறுகின்ற சந்தர்ப்பங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. நிறையவே நிறைந்து கிடக்கின்ற வகையில்

தப்லீக் என்கின்ற ஈமானுடைய உழைப்பின்போது வெளி யாகக் கூடியதை கண்டு வந்திருக்கின்றோம். எனவேதான், இதைப் போன்ற அமைப்பு வேறு எதிலும், எந்த ஒரு முயற்சியிலும் கண்டு கொள்ளவே முடியாது என்று சொல்லி வைக்க வேண்டியதாயிருக்கிறது.

மேன்மைமிக்க சஹாபா பெருமக்கள் கலந்துறவாடலா லும் ஊழியம் புரிவதில் முன்மாதிரியாக விளங்கியதாலுமே தீனையும் தீனின் கலையையும் கற்கக்கூடியவர்களாக இருந்தார்கள் என்பது குறிப்பிடப்பட வேண்டிய ஒரு விடயமாகும்.

இந்த இடத்தில் சின்ன ஒரு கேள்வி.

தீனுல் இஸ்லாத்தை படிப்பதற்கும் அதை செயல் படுத்த வேண்டிய சட்டதிட்டங்கள் பற்றிய விளக்கங்களை பெற்றுக் கொள்வதற்கும் ஜமாஅத்தில் போய்த்தான் ஆக வேண்டுமா? வீட்டில் இருந்து கொண்டே புத்தங்கள் வாயிலாக அல்லது ஆலிம்களின் உதவியைக் கொண்டு விளங்கிக் கொள்ள முடியாதா? என்ற எண்ணம் சிலருடைய எண்ணத்தில் எழலாம். வாதிடக் கூட முற்படலாம்.

முடியும் என்பதுதான் எமது பதில்.

குறிப்பாக தீனுல் இஸ்லாத்தின் சட்டதிட்டங்கள் சம்பந்தமாக விளக்கங்கள் கொண்ட விதவிதமான நூற் களும் சஞ்சிகைகளும் பத்திரிகைகளில் வெளிவரக்கூடிய ஆக்கங்களும் எல்லா மொழிகளிலும் நிறைந்து காணக் கிடக்கின்ற இன்றைய காலத்தில் அது முடியாத ஒரு காரிய மல்ல.

ஆனால், அவைகளை விலை கொடுத்து வாங்கிப் படிப்பவர்கள் அல்லது மார்க்கத்தை கற்றறிந்த ஆலிம்களை தேடிச் சென்று சன்மார்க்க சட்டதிட்டங்களை தெரிந்து தெளிவு பெற வேண்டுமென்ற தேட்டம் கொண்டவர்கள்

நம்மில் இன்று எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்ற ஒரு ஆய்வு செய்து பார்த்தால் வெட்கப்பட வேண்டிய ஒரு முடிவைத்தான் கண்டு கொள்ள முடியும்.

தீனுடைய விளக்கங்கள் நிறைந்த நூற்கள் குறைவு சொல்ல முடியாத வகையில் பெரும் அளவில் இருக்கத் தான் செய்கின்றன. ஆலிம்களுக்கும் பஞ்சமில்லைதான். ஆனால், நல்லதைத் தேடி படிக்கும் பழக்கம் இருக்க வேண்டுமே! படித்து தெளிவு பெற வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட வேண்டுமே!

ருசிகரமான உணவு தயார் செய்யப்பட்டு பரத்தி வைக்கப்பட்டிருந்தாலும் பசி உண்டானால்தான் புசிப்ப தற்கு நாட்டம் ஏற்படும்.

தீனைப் படிக்க வேண்டும் என்ற எண்ணமும் அதனை செயல் வடிவில் எடுத்து நடக்கத் தேவையான சட்டதிட்டங் களை விளங்க வேண்டுமென்ற ஆர்வமும் உருவானால் தான் நூற்களின் பக்கம் நாட்டமும் ஆலிம்களை தேடிச் செல்லும் தேட்டமும் ஏற்படும்.

இந்த தேட்டமும் நாட்டமும் உண்டாக சூழல் உருவாக்கப்பட வேண்டும்.

தப்லீகுடைய உழைப்புக்குள் நுழைந்து பார்ப்பவர் களுக்கு அத்தகைய ஒரு சூழலை அங்கே கண்டு கொள்ள முடியும்.

அத்துடன் நடமாடும் இந்த மதரஸாவாகிறது கற்பது, கற்றுக் கொடுப்பது என்பதோடு மாத்திரம் நின்று விடும் வகையில் அமைந்ததொன்றல்ல. மாறாக, கற்றதன் பிரகாரம் அமல் செய்யும் விடயத்தில் ஆர்வம் ஊட்டப்படுவதுடன் நாளாந்த வாழ்வில் அதனை எடுத்து நடப்பதற்குண்டான வழிமுறைகளை காட்டிக் கொடுப்பதிலும் கவனம் செலுத் தும் வகையிலேயே நடமாடும் இந்த மதரஸாவின் நடை

முறைகள் அமையப் பெற்றிருக்கின்றன. எனவேதான், இல்முக்கும் அமலுக்கும் தொடர்பை ஏற்படுத்துவதே இதன் நோக்கமாக இருக்கிறதென்று சுருக்கமாக இதற்கு விளக்கம் கூறப்படுவதுண்டு.

முக்கியமான இன்னொரு விடயத்தையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். அதாவது நல்லதை கற்றுக் கொள்வதும், தப்புத் தவறுகளிலிருந்து நீங்கி திருத்தத்தை உண்டாக்கிக் கொள்வதும் அவரவர்களுடைய நாட்டத்தையும் தேட்டத்தையும் பொருத்தே அமையக் கூடியதொன்றாகும்.

எந்தளவுக்கு கவலை கொண்டு கவனம் செலுத்தி ஒரு காரியத்தின் மீது முயற்சி எடுக்கப்படுமோ அந்தளவுக்கு அந்த காரியத்தின் மூலம் பலாபலன்களை கண்டு கொள்ள முடியும். அடியேனுடைய வாழ்வில் இடம்பெற்ற ஒரு நிகழ்வின்போது கிடைக்கப்பெற்ற அருமையான ஒரு உபதேசத்தின் மூலம் இந்த கூற்றை நியாயப்படுத்த முடியும் என்று நினைக்கிறேன்.

1970-ம் ஆண்டு, நாங்கள் மூன்று வாலிபர்கள் மூன்று சில்லாவுக்காக இலங்கையிலிருந்து இந்தியாவுக்கு சென்றிருந்த சந்தர்ப்பத்தில் முதல் கட்டமாக திண்டுக்கல் நகரில் நடைபெற்றுக் கொண்டிருந்த தமிழ்நாட்டின் மஷூரா கூட்டமொன்றில் கலந்து கொள்ளும் வாய்ப்பொன்றை கிடைக்கப் பெற்றோம்.

அன்றைய அந்த மஷூரா திருச்சி அன்வாருல் உலூம் அரபிக் கல்லூரியின் ஸ்தாபகரும் அதன் ஆரம்ப அதிபருமாக பணி புரிந்து வந்த மர்ஹூம் மௌலானா அப்துஸ் ஸலாம் அவர்களின் தலைமையின்கீழ் நடந்து கொண்டிருந்தது. இலங்கை வந்த நாலைந்து சந்தர்ப்பங்களின்போது அவர்களுடைய அறிமுகம் ஏற்கனவே அடியேனுக்கு

கிடைத்திருந்ததால் அவர்களுடன் அன்யோன்யமாக மனம் விட்டு பேசும் அளவுக்கு ஒரு சிறு தொடர்பு உண்டாகி இருந்தது.

அவர்கள் என்னைப் பார்த்து எனது பெயரைச் சொல்லி ''மூன்று சில்லாவுக்கு வந்திருப்பது ரொம்பவும் சந்தோஷ மான செய்தி. எங்கே நீங்க போக விரும்புறீங்க? தமிழ் நாட்டில் வேலை செய்ய விரும்புகிறீர்களா? அல்லது டெல்லிக்கு போகணுமா?'' என்று வினவினார்கள்.

நாங்கள் சொன்னோம், மௌலானா! நாங்கள் ரொம்ப வும் சிரமத்திற்கு மத்தியில் வந்திருக்கிறோம். ஈமானை படிக்க வேண்டும், தீனுடைய வேலையைப் பற்றிய விளக்கங்களை நன்றாக விளங்க வேண்டும் என்பதுதான் எமது நோக்கம். எனவே, எங்களை நீங்கள் எங்கு அனுப்பினாலும் நாங்கள் போகத் தயார். ஆனால் ஒரேயொரு வேண்டுகோள்,

அதாவது ஈமானை படித்துத் தருவதற்கும் தீனுடைய வேலையின் விளக்கங்களை சொல்லித் தருவதற்கும் தகுதி யும் அனுபவமும் ஆற்றலும் வாய்ந்த நல்ல ஒரு அமீருடன் எங்களை இணைக்க வேண்டும். அந்த ஏற்பாட்டை மாத்திரம் எப்படியாவது எங்களுக்கு செய்து தந்திட வேண்டும் என்பதுவே எமது வேண்டுகோளாக இருந்தது.

அதற்கவர்கள், இவ்வளவுதானா? ஈமானை படிக்க வேண்டும், தீனுடைய வேலையின் விளக்கங்களை விளங்கிக் கொள்ள வேண்டும் என்பதுதானே உங்களின் நோக்கம் என்று கேட்டு விட்டு,

இது ரொம்பவும் சின்ன விஷயம். இதற்கெல்லாம் படித்த, தகுதிவாய்ந்த அனுபவம் நிறைந்த அமீர்தான் வேண்டும் என்ற தேவையேயில்லை. எப்படிப்பட்டவர் அமீராக வந்தாலும் சரியே. இரண்டு விஷயம் செய்யத்

தெரிந்தால் போதும். நீங்கள் விரும்புகின்ற அந்த இரண்டும் உங்களுக்கு ரொம்பவும் இலகுவாக கிடைத்துவிடும் என்று சர்வ சாதாரணமாக கூறிவிட்டு,

ஒன்று, இந்த இரண்டும் எனக்கு கிடைத்திட வேண்டுமே என்று கவலைப்பட தெரிய வேண்டும். அடுத்தது, இரவில் எல்லோரும் தூக்கத்தில் இன்பத்தை கண்டு கொண்டிருக்கும் வேளையில் சிரமம் பாராது தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து தொழுது அல்லாஹ் விடம், ''ரப்பே! இந்த இரண்டையும் எனக்கு தந்திடு யா அல்லாஹ்!'' என்று கெஞ்சி அழத் தெரிய வேண்டும் என்ற அழகான ஒரு விளக்கத்தை தந்தார்கள். எனவேதான், ஒருவருடைய நாட்டத்தையும் தேட்டத்தையும் பொருத்தே எதுவும் அமையக்கூடியதாக இருக்கிறது என்ற கருத்தை சொல்லி வைக்க விரும்புகிறேன்.

தஃவத்துடைய உழைப்பில் மூன்று நாட்கள், நாற்பது நாட்கள், நான்கு மாதங்கள் என்ற அடிப்படையில் கால நேரங்களை ஒதுக்கி ஜமாஅத்தில் செல்கின்ற வேளைகளில் ஜமாஅத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து கூட்டாக சில அமல்களில் ஈடுபடுவதை கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. மனிதர்களின் உள்ரங்க வெளிரங்க சீர்திருத்தத்தை நோக்கமாக வைத்து ஏற்படுத்தி வைக்கப்பட்டுள்ள அத்தகைய அமைப்பானது தஃவத்துடைய உழைப்பின் சிறப்பம்சங்களுள் ஒன்றாகும்.

ஐவேளை தொழுகை, தஃலீம், கஷ்த், பயான், தஷ்கீல், பிரயாணம், சாப்பாடு, தூக்கம் ஆகியவைகளே கூட்டான அந்த எட்டு அமல்களாகும். அவைகளுள் தஃலீம் மிக முக்கிய ஸ்தானத்தை வகிக்கும் வகையில் அமைந் துள்ள அமலாகும்.

ஜமாஅத்தில் செல்கையில் ஒவ்வொரு நாளும் குறைந்தது நான்கு மணித்தியாலங்களையாவது தஃலீம்

என்ற அமலுக்காக நேரம் ஒதுக்கப்பட வேண்டும் என்பது ஈமானுடைய உழைப்பின்போது அமையப்பட வேண்டிய பொதுவான ஒரு நிபந்தனையாகும். இலங்கையை பொறுத்த வரையில் பொதுவாக காலையில் இரண்டரை மணித் தியாலமும் மாலையில் ஒன்றரை மணித்தியாலமும் இதற் காக பயன்படுத்துவது வழமையான ஒரு நடைமுறையாக இருந்து வருகிறது.

தஃ்லீம் என்ற அமலின் போது மூன்று விதமான நிகழ்ச்சிகள் இடம் பெறுவதை கட்டாயப்படுத்தப் பட்டுள்ளது. அவையாவன :-

1. அமல் செய்வதற்கு தேட்டத்தையும் ஆர்வத்தையும் ஏற்படுத்தும் நோக்கத்துடன் தொழுகையின் சிறப்பு, குர்ஆனின் சிறப்பு, திக்ரின் சிறப்பு, தப்லீகின் சிறப்பு, ஸலவாத்தின் மகிமை, ரமளானின் சிறப்பு, ஹஜ்ஜின் சிறப்பு, ஸஹாபாக்களின் சரிதை, ரியாளுஸ் ஸாலிஹீன், முன்தகாபுல் ஹதீஸ் ஆகிய அமல்களின் சிறப்புக்களின் தொகுப்புகள் அடங்கிய கிதாபுகளை வாசித்துக் கேட்டல்.
2. குர்ஆனின் சில சூராக்களை ஓதுவதையும் செவி மடுப்பதையும் ஹல்காக்கள் அமைத்து செயல் படுத்துவது.
3. ஆறு நம்பர் முதாக்கராவில் ஈடுபடுதல்.

நல்ல ஒரு மனிதரிடத்தில் அவசியம் குடி கொண்டி ருக்க வேண்டிய அழகிய சிபாத்துகளைப் பற்றிய விளக்கமே ஆறு நம்பர் என்பதின் இரகசியமாகும். எவரெல்லாம் அதன் அந்தரங்கங்களை விளங்கி சொல்லாலும் செயலாலும் தொடர்ந்து அதன்மீது முயற்சி செய்யக்கூடியவர்களாக ஆகி விடுவார்களோ அவர்களுக்கு அல்லாஹ்வின் ஏவல்களை எடுத்தும், விலக்கல்களை தவிர்ந்தும் தீனின் பிரகாரம்

வாழ்வது மிகவும் எளிதான காரியமாக ஆகிவிடும் என்பது அனுபவத்தின் மூலம் கண்டு வரும் ஒரு உண்மையாகும்.

மேற்குறிப்பிட்ட மூன்று அமல்களுள் குர்ஆன் ஹல்கா பொதுவாக அரை மணித்தியாலத்திற்கு குறையாமல் நடை பெற வேண்டிய ஒரு அமல். அந்தந்த ஜமாஅத்தினர்களின் அமைப்பிற்கேற்ப மும்மூன்று நபர்களாக அல்லது நன்நான்கு நபர்களாக சேர்ந்திருந்து குர்ஆன் ஹல்காவில் ஈடுபடுவர். அதில் எல்லோராலும் ஓத முடிகின்ற வகையில் இன்றைய காலத்து வழக்கத்தில் சூரா பாத்திஹாவுடன் அல்குர்ஆனில் இறுதியாக அமைந்திருக்கும் சில சூராக்களை ஒவ்வொருவராக மாறி மாறி ஓதிக் கொள்வர். அதில் அமர்ந்திருப்பவர்களில் சிலருக்கு சில வேளை சில சூராக்களை ஓதத் தெரியாமலிருக்கும். அல்லது முறையாக ஓத முடியாமலிருக்கும். எனினும் அந்த சமயத்தில் அதைப் பற்றி எந்தவிதமான விமர்சனமும் செய்யப்பட மாட்டாது. ஜமாஅத்தில் போய் பழக்க மில்லாதவர்களுக்கு அத்தகைய அமைப்பு ஒரு குறையாகத் தெரியலாம்.

ஆனால், முபாரக்கான ஈமானுடைய உழைப்பில் இடம்பிடித்துக் கொண்டிருப்பவர்கள் இந்த முறையை பின்பற்றுவதில் ஏற்படுகின்ற பலாபலன்களை அனுபவ மூலமாக அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஈமானுடைய உழைப்பில் செய்யப்பட வேண்டிய ஒவ்வொரு பணியும் ஒவ்வொரு மனிதனுடைய தராதரத்திற்கும் சந்தர்ப்ப சூழ்நிலை களுக்கும் ஏற்ற விதத்தில் தனித்தன்மையான ஒரு வழியில் அமைத்து வைக்கப்பட்டிருப்பதே இதற்கு காரணமாகும். ஈமானுடைய உழைப்புக்காகவே தங்களின் வாழ்நாள் பூராவும் அர்ப்பணித்து பாடுபட்டுக் கொண்டிருக்கும் தீனுடைய பெரியார்கள் குர்ஆன் ஹதீஸ் வெளிச்சத் தினதும், சங்கை பொருந்திய சஹாபா பெருமக்களின் மனம் பொருந்திய வாழ்க்கை வரலாற்றில் காணக் கிடக்கின்ற

சம்பவங்களின் உதவியைக் கொண்டும் ஆராய்ச்சி செய்து அடையப்பெற்ற விளக்கங்களுடன் அனுபவமும் சேர்ந்து உருவாக்கப்பட்டுள்ள வழிமுறைகளே ஈமானுடைய உழைப்பில் காலாகாலமாக நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்றன. அவசியம் ஏற்படும் பொழுது மஷ்வரா செய்து காலத்திற்கேற்றவாறு இந்த நடைமுறைகளில் சில வேளை களில் ஒரு சில மாற்றங்கள் செய்யப்படுவதுமுண்டு.

ஆக, கால நேரங்களை ஒதுக்கி அல்லாஹ்வின் பாதை யில் வெளியாகி ஈமானுடைய உழைப்பில் பெரியார்களின் புத்திமதிகளின் பிரகாரம் தம்மை ஈடுபாடுள்ளவர்களாக ஆக்கிக் கொண்டு வரும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தடவையும் பயன் தரும் ஏதாவது ஒரு பாடத்தையாவது படித்துக் கொள்ளும் வகையிலேயே நடமாடும் இந்த மதரஸாவின் வேலைத் திட்டங்கள் அமைத்து வழி நடத்தப்படுகின்றன என்பதை மறுபடியும் இங்கு சொல்லி வைக்க விரும்புகின்றேன்.

அவரவர்களின் நாட்டத்தையும் தேட்டத்தையும் பக்குவத்தையும் பத்தியத்தையும் பொறுத்து சிலர் குறைவாகவும், சிலர் நிறைவாகவும் பலாபலன்களை பெற்று பாக்கியவான்களின் கூட்டத்தில் சேர்ந்து கொள்ள தகுதியுடையவர்களாக தம்மை ஆக்கிக் கொண்டவர்கள் கொஞ்சநஞ்சமல்ல. பலதரப்பட்ட அமைப்புக்களில் வாழ்ந்து வரும் அன்பர்களில் பலர் இவ்வாறான நற்பயன்களை பெற்று அதிர்ஷ்டத்திற்குரியவர்களாக ஆகியிருக்கின்றனர். அவர்களில் பலரை அடியேன் மாத்திரமல்லாது வாசகர் களிலும் பலர் கண்டிருப்பார்கள்.

பல்வேறு விடயங்களில் முன்மாதிரியாக காட்சி யளிக்கும் அத்தகையோர்களை தகுதி பெற்ற ஆலிம்கள் என்று அழைக்க முடியாவிட்டாலும் ஆலிமுடைய அந்தஸ்

தின் அளவுக்கு அவர்களை அல்லாஹ் நடமாடும் மதரஸா வின் பரக்கத்தினால் உயர்த்தி கண்ணியப்படுத்தி இருப்பதை பார்க்க முடிகிறது. அவர்கள் மார்க்கத்தின் அத்தியாவசிய மான எந்த ஒரு விடயத்தைப் பற்றி வினவினாலும் உடனே அதற்கு விளக்கம் கூறும் வகையில் வளர்ந்து ஆற்றலும் தகுதியும் பெற்று நடமாடும் மதரஸாவின் மகிமைக்கோர் எடுத்துக்காட்டாக விளங்குகின்றார்கள் என்று கூறினால் அது மிகையான ஒரு விமர்சனமாக இருக்க முடியாது.

எனினும் அடக்கமான போக்கை கடைப்பிடிப்பதில் பழக்கப்பட்டவர்களாக இருந்து வரும் அத்தகைய நிறை குடங்கள் எந்த சந்தர்ப்பத்திலும் தம்மை பெரிதுபடுத்திக் கொள்ளும் எண்ணத்தில் காட்டிக் கொள்ளவும் மாட்டார் கள், அலட்டிக் கொள்வதுமில்லை. அதனால் அப்படிப்பட்ட வர்கள் பொதுவாக சாதாரண மக்களுக்கு பெரிதாக தெரிவதுமில்லை.

உதாரணத்திற்கு அடியேனுக்கு நன்கு அறிமுகமான ஒரு சகோதரரைப் பற்றிய சில விபரங்களை குறிப்பாக இங்கு கூறி வைக்க முடியும்.

சுமார் முப்பது சொச்சம் வருடங்களுக்கு முன்பதாக தீனுடைய உழைப்பில் தன்னை இணைத்துக் கொள்ள முன்வந்தபோது வாலிபனாக இருந்த அவர் மூடை தூக்கும் நாட்டாமை வேலை செய்யும் கூலித் தொழிலாளியாக தனது வாழ்வை தொடங்கியவர். எழுத வாசிக்க தெரியாதவராக இருந்தது மாத்திரமல்லாது தனது கையொப்பத்தைக் கூட தெளிவாக எழுதத் தெரியாத நிலையில் மிகவும் பிற்போக் கான அமைப்பில் அனுதாபத்திற்குரிய ஒருவராகவே விளங்கி நின்றார்.

உலகப் படிப்பும் இல்லை, மார்க்கக் கல்வியும் இல்லை. பள்ளிக்கூடம் போனதும் கிடையாது, மதரஸாவை கண்டதும் கிடையாது. சின்ன வயதிலேயே தொழில் தேடிக் கொள்வதில் கட்டாயப்படுத்தப்பட்டவர்.

சுமார் பதினெட்டு வயதாயிருக்கும் பொழுது ஈமானுடைய உழைப்பின் அறிமுகம் கிடைக்கப் பெற்று ஆரம்பத்திலேயே அதில் துடிதுடிப்புடன் மும்முரமாக தன்னை ஈடுபடுத்த முன்வந்த அவருக்கு இலங்கை தப்லீக் ஜமாஅத்தின் தந்தை பெரிய அமீர் சாஹிப் மர்ஹூம் ஹாஜி ஹனிபா அவர்களின் ஆசியும் அனுசரணையும் குறைவில்லாமல் கிடைக்கப் பெற்றதுடன் அன்றைய காலங்களில் இலங்கையின் அன்றைய பின்தங்கிய பகுதிகளில் அனுபவமும் ஆற்றலும் கொண்ட தியாகிகள் பலரின் பங்களிப்புக்களுடன் மிகப் பெரும் தியாகத்துடன் பவனி வந்து கொண்டிருந்த பைதல் ஜமாஅத்துக்களில் அடிக்கடி கலந்து கொள்ளும் வாய்ப்புக்களை அடைந்து கொண்டதும் முன்னேற்றத்தை கண்டு கொள்ள பெரிதும் உதவியாக அமைந்தது எனலாம். முன்வைத்த காலை அல்லாஹ்வின் கிருபையால் அவர் இது நாள் வரைக்கும் பின்னெடுக்கவே இல்லை.

குர்ஆனின் எத்தனையோ சூராக்களை மனப்பாடமிட்டிருப்பதுடன், தர்தீபை பேணி திருத்தமாகவும் அழுத்தமாகவும் அழகாக ஓதுவதிலும் ஆற்றல் படைத்தவராக வளர்ந்து நிற்கும் அவர் நடமாடும் இந்த மதரஸாவின் மூலம் மிகப்பெரும் பலாபலன்களை பெற்றுக் கொண்ட அதிர்ஷ்டசாலிகளில் ஒருவராகவே எனக்கு தெரிகின்றார். இவரைப் போன்று எண்ணிக்கையில் அடக்க முடியாத இன்னும் எத்தனையோ பாக்கியசாலிகளையும் நடமாடும் இந்த மதரஸா உருவாக்கி இருக்கின்றது.

எனவே, வெறும் வார்த்தைகளால் மாத்திரம் விளக்கிச் சொல்லிவிட முடியாத அளவு அற்புதம் நிறைந்த ஒரு அமைப்பாக விளங்கி நிற்கும் நடமாடும் இந்த மதரஸாவின் மகிமையை விளங்கிக் கொள்வதற்காக சங்கைக்குரிய மேலான எனது முஸ்லிம் சகோதரர்களுக்கு தனிப்பட்ட நபர்களின் மீது வைத்திருக்கும் விருப்பு வெறுப்புக்களை தூக்கி வீசி எறிந்து விட்டு உண்மையான நிலையை அறிய வேண்டுமென்ற நல்ல எண்ணத்தை இதயத்தில் சுமந்த வண்ணம் திறந்த மனதுடன் தாமும் பலன் பெற வேண்டும் என்ற நிய்யத்துடன் ஒரேயொரு தடவை ஒரு மூன்று நாள் ஜமாஅத்திலாவது போய்ப் பாருங்கள் என்ற தாழ்மையான தொரு வேண்டுகோளை விடுக்க விரும்புவதுடன், அப்படி செய்வதின் மூலம் நடமாடும் இந்த மதரஸாவின் மகிமையை நிச்சயம் உங்களால் விளங்கிக் கொள்ள முடியும் என்பதை யும் உறுதியுடன் சொல்லி வைப்பதுடன், ஷரீயத்தில் சொல்லி வைக்கப்பட்டிருக்கும் சில பாடங்களை படித்து விளங்கிக் கொள்ளும் பாக்கியத்தை பெற்றிருக்கும் அடியேன் அவைகளில் அதிகமானவைகளை அல்லாஹ் வின் பாதையில் நடமாடும் இந்த மதரஸாவின் மூலமாகவே படிக்கும் வாய்ப்பினை பெற்றுக் கொள்ள முடிந்தது என்பதையும் இந்த இடத்தில் பெருமிதத்துடன் சொல்லி வைக்க விரும்புகின்றேன்.

இனி இதுவரை இந்த பாடத்தில் சொல்லி வந்த விளக்கங்களை உறுதிப்படுத்தும் வகையில் ஜமாஅத்தில் இணைந்து ஈமானுடைய உழைப்பில் ஈடுபடக்கூடியவர் கள் எந்தளவுக்கு பயன் பெறக்கூடியவர்களாக இருந்து வருகின்றனர் என்பதை எடுத்துக் காட்டுவதற்காக அடியேனின் அனுபவத்தில் இடம்பெற்ற சில சம்பவங்களை மாதிரிக்காக இதில் இடம்பெற வைத்திருக்கிறேன், படித்துப் பாருங்கள்.

## 2. ஸஜ்தா திலாவத்

இலங்கையின் மலைநாட்டுப் பகுதியில் அமைந் திருக்கும் இயற்கை வளம் பொருந்திய ஊர்களுள் பொகவந்தலாவயும் ஒன்று.

1970-ம் ஆண்டில் கொழும்பிலிருந்து மூன்று நாள் ஜமாஅத் ஒன்றில் அவ்வூருக்கு அடியேன் சென்றிருந்த சமயம் இடம்பெற்ற ஒரு நிகழ்வு.

அல்லாஹ்வின் பாதையில் ஈமானுடைய உழைப்பில் ஈடுபடும் காலங்களில் இலங்கையை பொறுத்த வரையில் தஃலீம் என்ற நிகழ்ச்சி பொதுவாக காலை வேளைகளில் இரண்டரை மணித்தியால நேரமும் மாலை வேளைகளில் ஒன்றரை மணித்தியால நேரமும் இடம்பெறுவது வழமை.

அன்றைய தஃலீம் நிகழ்ச்சியை ஆரம்ப காலம் தொட்டே ஈமானுடைய உழைப்பில் அக்கறையோடு பாடுபட்டு வந்த கொழும்பு கொம்பனித் தெரு யூனியன் லேனைச் சேர்ந்த மர்ஹூம் தாஹா நானா பொறுப்பாக இருந்து நடத்திக் கொண்டிருந்தார்.

தஃலீம் நிகழ்ச்சியை தகுதி வாய்ந்தவர்கள் நடாத்துகையில் இடைக்கிடை மார்க்கத்தின் சட்டதிட்டம் சம்பந்தமாக சந்தர்ப்பம் சூழ்நிலையை அனுசரித்து தேவை யான ஒரு சில விளக்கங்களையும் சொல்லிக் கொள்வது ஈமானுடைய உழைப்பின் போது இடம்பெறும் வழமை யான ஒரு செயலாக இருந்து வருகிறது.

அன்றைய தஃலீம் நிகழ்ச்சியின் போது தாஹா நானா சொல்லிக் காட்டிய ஒரு விடயம் எனக்கு புதிதாக இருந்தது.

தொழுகையின் போதும், ஏனைய நேரங்களில் குர்ஆன் ஓதுகையிலும் ஸஜதாவின் வசனம் இடைப்படுகையில் சிரம்

பணிந்து ஸஜதா செய்யும் பொழுது ஓத வேண்டிய தஸ்பீஹை ரொம்பவும் தெளிவாக உச்சரித்து அழகாக ஓதிக் காட்டினார். அது நாள் வரைக்கும் அந்த தஸ்பீஹ் எனக்கு புதிது. காது தாழ்த்தி கவனமாக அந்த மஜ்லிஸில் அமர்ந் திருந்ததால் நன்றாக என்னால் அதனை அவதானித்து கேட்க முடிந்ததுடன், அன்றே அதனை பாடமிட்டாக வேண் டும் என்று என்னுள் ஒரு முடிவும் செய்து கொண்டேன்.

அது நாள் வரை அவ்வாறான சந்தர்ப்பங்களில்

سُبْحَانَ اللهِ وَالْحَمْدُ لِلّٰهِ وَلَآ اِلٰهَ اِلَّا اللهُ
وَاللهُ اَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ
الْعَلِيِّ الْعَظِيْمِ

என்கின்ற கலிமாவை ஓதிவரும் வழக்கத்தையே கொண் டிருந்தேன். அது நானாகவே ஏதோ ஒரு நினைப்பில் செய்து வந்ததொன்றாகவே இருந்து வந்தது.

அந்நிகழ்ச்சி முடிவுக்கு வந்ததும் தாஹா நானாவை அணுகி, ஸஜதா செய்ய வேண்டிய வசனம் இடைப்படும் போது ஓத வேண்டியதை சொல்லிக் காட்டினீர்களே இன்று வரை அதனை நான் தெரிந்திருக்கவில்லை. அதை கொஞ் சம் ஓதிக் காட்டுங்களேன் என்று கேட்டுக் கொண்டதும் அவர் சொல்லிக் காட்டினார்.

மறுபடியும் என்றேன், ஓதிக் காட்டினார். இன்னொரு தடவை என்றதும் மீண்டும் ஓதினார். நிறுத்தி நிறுத்தி திருத்தமாக ஓதினார். அல்ஹம்துலில்லாஹ் எனக்கு பாடம் வந்து விட்டது.

அவருக்கு நன்றி செலுத்தி விட்டு ஓரமாக ஓரிடத்தில் அமர்ந்த வண்ணம் பாடமிட்டதை உள்ளத்தில் நன்றாக பதியும் வரைக்கும் மீட்டிக் கொள்ள தொடங்கினேன்.

மூன்று நாள் வக்தை பூர்த்தி செய்த பின்னர் வீடு திரும்பியதும் தொழுகையைப் பற்றிய விளக்க நூலைப் புரட்டி பாடமிட்டதை சரிபார்த்துக் கொண்டதுடன் அதனுடைய கருத்தையும் தெரிந்து கொண்டேன்.

سَجَدَ وَجْهِيَ لِلَّذِي خَلَقَهُ وَصَوَّرَهُ وَشَقَّ سَمْعَهُ
وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ فَتَبَارَكَ اللهُ أَحْسَنُ الْخَالِقِينَ

“தனது தனிப் பெரும் சக்தியைக் கொண்டும் வல்லமையை கொண்டும் எனது உடலை படைத்து உருவம் அமைத்து அதை சீர்படுத்தி கேள்வியையும் பார்வையையும் கொடுத்தருளிய இறைவனுக்கு சிரம் தழ்த்தி சாஷ்டாங்கம் செய்கிறேன். அல்லாஹ் மிக மேன்மையானவன். அவன் தான் மிகச் சிறந்த சிருஷ்ட்டிகர்த்தா” என்பதுவே அந்த தஸ்பீகும் அதன் கருத்துமாகும்.

அருள் மறையாம் அல்குர்ஆனில் ஸஜதாவுடைய வசனங்கள் பதினைந்து இடங்களில் இடம் பெறுகின்றன.

அதில் ஏதேனுமொரு வசனத்தை தொழுகையின் போது ஓதினால் அதனை ஓதுபவரும் கேட்பவர்களும் ஒரு ஸஜதா செய்தாக வேண்டும். தொழுகையல்லாத நேரங்களில் குர்ஆனை ஓதும் போது ஸஜதாவுடைய வசனங்கள் ஓதினாலும் அல்லது பிறர் ஓத செவிமடுத்தாலும் “திலாவத்துடைய ஸஜதாவைச் செய்கிறேன்” என்று நிய்யத் செய்து “அல்லாஹு அக்பர்” என்று தக்பீர் சொல்லி சிரம் பணிந்து ஒரு ஸுஜூது செய்தாக வேண்டும்.

இவ்வாறு ஸஜ்தா செய்ய வேண்டிய வசனங்கள் இடம் பெறுகின்ற இடங்களாவன :

| பகுதி எண் | அத்தியாயம் எண் | ஸூராவின் பெயர் | வசன எண் |
|---|---|---|---|
| 9 | 7 | ஸூரத்துல் அஃராப் | 206 |
| 13 | 13 | ஸூரத்துல் ரஃது | 15 |
| 14 | 16 | ஸூரத்துல் நஹ்ல் | 50 |
| 15 | 17 | ஸூரத்துல் பனீ இஸ்ராயீல் | 109 |
| 16 | 19 | ஸூரத்துல் மர்யம் | 58 |
| 17 | 22 | ஸூரத்துல் ஹஜ் | 18 |
| 17 | 22 | ஸூரத்துல் ஹஜ் | 77 |
| 19 | 25 | ஸூரத்துல் ஃபுர்கான் | 60 |
| 19 | 27 | ஸூரத்துல் நம்லு | 26 |
| 21 | 32 | ஸூரத்துல் ஸஜதா | 15 |
| 23 | 38 | ஸூரத்துல் ஸாத் | 24 |
| 24 | 41 | ஸூரத்துல் ஹாமீம் ஸஜ்தா | 38 |
| 27 | 53 | ஸூரத்துல் னஜ்மு | 62 |
| 30 | 84 | ஸூரத்துல் இன்ஷிகாக் | 21 |
| 30 | 96 | ஸூரத்துல் அலக் | 19 |

பொகவந்தலாவ என்ற மலையகத்தில் எந்த நாளில் இந்த சம்பவம் இடம் பெற்றதோ அன்று முதல் இன்று வரை அல்லாஹ்வின் பாதையில் ஈமானுடைய உழைப்புக்காக கால நேரங்களை ஒதுக்கி போய் வந்து கொண்டிருக்கும் காலமெல்லாம் நேர காலத்தை பக்குவமாக பயன் படுத்து வதின் மூலம் பியோஜனங்களை அடைந்து கொள்ளட்டும் என்ற நல்லெண்ணம் கொண்டு அந்த சம்பவத்தை சந்தர்ப்பம் சூழ்நிலைகளை அனுசரித்து பல இடங்களில் பல தடவைகள் சொல்லி வந்திருக்கிறேன்.

அவ்வாறான சந்தர்ப்பங்களில் இன்றும்கூட ஒவ்வொரு தடவையும் ஒரு நபராவது அடியேனை அனுகி அதைப் பற்றிய விபரத்தை தெளிவுபட விசாரித்து பாடமாக்கிக் கொள்வதற்காக அதனை எழுதித் தரும்படி கேட்டுக் கொள்ளாமல் இருந்ததே இல்லை. இதனை எண்ணிப் பார்க்கும் போதெல்லாம் நடமாடும் இந்த மதரஸாவின் மகிமையை எண்ணி எண்ணி வியப்புறுவதுண்டு.

ஒரு தடவை கொழும்பில் வசதி படைத்தவர்களும் படித்த மக்களும் நிறைந்து வாழும் ஒரு மஹல்லாவுக்கு மாளிகாவத்தை ஜமாஅத்துடன் மூன்று நாட்கள் வக்தில் சென்றிருந்த போது தஃலீம் நிகழ்ச்சி முடிந்ததும் அடியேனுக்கு ஏற்கனவே அறிமுகமானவராயிருந்த அவர் என்னை அனுகி நான் ஓதிக் காட்டிய அந்த தஸ்பீகை எழுதித் தரும்படி கேட்டுக்கொண்டார்.

இன்னொரு சம்பவம் :-

ஒரு சமயம் முப்பது வயது மதிக்கத்தக்க வாலிப ரொருவர் அடியேனுடன் மூன்று நாள் ஜமாஅத்தில் வந்தி ருந்தபோது இரண்டாம் நாள் காலையில் இடம் பெற்ற தஃலிம் நிகழ்ச்சி முடிவுக்கு வந்ததும் இதே சம்பவத்தை சொல்லிக் காட்டி ஓதியும் காட்டினேன். சபையினர்

கலைந்ததும் அந்த வாலிபர் ஒரு நோட் புத்தகத்துடன் என்னிடம் வந்து அதை எழுதித்தரும்படி கேட்டுக் கொண்டதுடன் தொழுகையின் போது மறதி ஏற்படும் சந்தர்ப்பங்களில் ஸஜதா செய்து அதில் ஓத வேண்டிய தஸ்பீஹையும் எழுதித் தரும்படி கேட்டுக் கொண்டார்.

அவர் தந்த நோட் புத்தகத்தை வாங்கி நாம் அன்று தங்கியிருந்த மஸ்ஜிதின் பேஷ் இமாமாக பணி புரிந்து வரும் கண்ணியத்திற்குரிய மௌலவி சாஹிபை அனுகி விடயத்தை விளக்கி வாலிபருக்கு அவைகளை எழுதிக் கொடுக்கும்படி வேண்டி நோட் புத்தகத்தை அவரிடம் கொடுத்ததும் அவர் எந்தவித மறுப்பும் தெரிவிக்காமல் உடனே அவைகளை எழுதி கொடுக்கலானார்.

தொழுகையின் கடைசி அத்தஹிய்யாத் ஓதி முடிந்த பின்பு ஸலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்காக செய்யப்படும் “ஸஜதா ஸஹ்வு” என்பதாகிறது. அப்ஆழ் சுன்னத்துக்களில் ஏதாவதொன்றை விட்டு விடுதல், அல்லது விட்டு விட்டதாக சந்தேகித்தல் வேண்டுமென்றே செய்தால் தொழுகையை முறித்து விடும், மறந்து செய்தால் தொழுகையை முறிக்காது என்ற நிலையிலுள்ள செயலை தொழுகையில் மறந்து செய்தல், தொழுகையில் ஓத வேண்டிவைகளை அதற்குரிய இடம் விட்டு வேறிடத்தில் ஓதல், தொழுகையில் ஒரு ரக்காத்தையோ, பர்ளையோ செய்யமாமல் விட்டுவிட்டதாக சந்தேகித்து மீண்டும் செய்தல் போன்ற காரணங்களில் ஏதாவதென்றுக்காக செய்யப்படும் ஸஜதாவாகும். அச்சமயத்தில்

سُبْحَانَ مَنْ لَا يَنَامُ وَلَا يَسْهُوْ

என்ற தஸ்பீஹை ஓதுவது சிறப்பிற்குரியது என்பது ஷரீயத் படித்துத் தரும் பாடமாகும்.

# 3. வஜ்ஜஹ்து

1970-ம் ஆண்டு தென் இந்தியாவின் ஹைதரபாத் நகரத்திலிருந்து நூற்றுக்கும் அதிகமான கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்திருக்கும் கர்னூல் என்ற கிராமத்திற்கு இஜ்திமா ஒன்றில் கலந்து கொள்வதற்காக பெரும் கூட்டத் துடன் பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்தோம்.

பல காலமாக தீனுடைய உழைப்பில் ஆந்திர மாநிலத் தின் முக்கிய பிரமுகர்களில் ஒருவராக விளங்கி வந்த ப்த்தேஹ் நஸிப்கான் என்ற சகோதரர் பிரயாணத்தின் போது என்னுடன் பக்கத்தில் அமர்ந்திருந்து மார்க்க சம்பந்தமான சில விடயங்களை ஞாபகப்படுத்திக் கொண்டிருந்த சமயம் முக்கியமான பாடமொன்றை படித்துக் கொள்ளக்கூடிய வாய்ப்பை என்னால் பெற்றுக் கொள்ள முடிந்தது.

வஜ்ஜஹ்த்தை ஓதுங்களேன் பார்ப்போம் என்றார்.

நான் ஓத ஆரம்பித்தேன். அது நாள் வரை தொழுகை யில் வழமையாக ஓதுவதைப் போன்று ஓதிக் காட்டினேன்.

மறுபடியும் ஓதச் சொன்னார், ஓதினேன்.

மீண்டும் ஓதச் சொன்னார். ஓதினேன்.

இன்னொரு தடவை என்றார்.

என்னுடைய ஓதலில் ஏதோ ஒரு தவறை கண்டதனா லேயே மீண்டும் மீண்டும் ஓதச் சொல்கிறார் என்று விளங்கி கொண்டு நான்காம் தடவையும் வழமையாக ஓதுவதைப் போலவே ஓதினேன்.

அப்போது தான் எனது தவறை சுட்டிக் காட்டி திருத்தித் தந்தார். சின்னத் தவறுதான். எனினும் தவறு தவறுதானே.

நான் ஓதியது இப்படித்தான்...

وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِي فَطَرَ السَّمٰوٰتِ وَالْأَرْضَ حَنِيفًا مُسْلِمًا وَّمَا أَنَا مِنَ الْمُشْرِكِينَ ۝

வரை சரியாகவே ஓதினேன். ஆனால் அதற்கு அடுத்த வசனத்தை இன்னஸ்ஸலாத்தி என்று ஓதத் தொடங்கிய போது அந்த இடத்தில் தடுத்து நிறுத்தி,

இன்னஸ்ஸலாத்தி அல்ல, இன்ன ஸலாத்தி என்று பிரித்து மொழிவதே சரியான முறையாகும் என்று சொல்லித் தந்தார்.

எனது அந்தத் தவறு ஒரு இலக்கனத் தவறே தவிர அர்த்தத்தை மாற்றக்கூடிய ஒரு தவறாக அது இருக்க வில்லை. எனினும் தவறு தவறேதான்.

அது நாள் வரை நான் ஓதி வந்த அந்தத் தவறை நடமாடும் தப்லீக் என்னும் மதரஸாவிலேயே திருத்திக் கொள்ளும் வாய்ப்பை பெற்றுக் கொள்ள முடிந்தது.

இதனை அதன் பிறகு அல்லாஹ்வின் பாதையில் புறப்பட்டுச்சென்ற காலங்களில் பல தடவைகள் பல இடங்களில் பல நபர்கள் மத்தியில் தீனுடைய முதாக் கராக்களின் போது பிரயோஜனம் ஏற்படலாம் என்றெண்ணி எடுத்துச் சொல்லிய சமயங்களிலெல்லாம் அவை மேலும் பலருக்கு பாடமாக அமைந்ததை குறிப்பிடத் தொடங்கி னால் இந்த சம்பவத்தை பெரிய அளவில் நீட்டிக் கொண்டே போக வேண்டி வரும் என்பதால் இத்துடன் இதனை நிறைவு செய்து கொள்கிறேன்.

வஜ்ஜஹ்தைப் பற்றிய இன்னொரு சம்பவம் :-

இது சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு இடம் பெற்ற ஒரு நிகழ்வு.

முப்பத்திநான்கு வயதுடைய ஒரு சகோதரர், முதல் தடவையாக மூன்று நாள் ஜமாஅத் ஒன்றில் அடியேனுடன் கண்டிக் கருகாமையில் அமைந்திருக்கும் உடுதெனிய என்ற ஊருக்கு வந்திருந்தார்.

திருமணம் செய்து சுமார் எட்டு வருடங்கள் ஆகிய அவர் இரண்டு பிள்ளைகளுக்கு தந்தையாக விளங்குபவர்.

திருமணம் செய்த பின்புதான் மனைவியின் தூண்டுதலின் காரணமாக தொழ ஆரம்பித்தாராம்.

எமது அந்த பிரயாணத்தின் போது வெட்கமோ கூச்சமோ கொள்ளாது தெரியாத விடயங்களை கேட்டு தெரிந்து கொள்வதில் மிகவும் அக்கறையுடனும் ஆர்வத்துடனும் நடந்து கொண்டார்.

அவ்வாறு அவர் கேட்டுக் கொண்டதில் ஒன்றுதான் வஜ்ஜஹ்ஹைப் பற்றியது.

ஜமாஅத்துடன் தொழும் பொழுது இமாம் ஆரம்ப தக்பீர் கூறி தொழுகையை ஆரம்பம் செய்ததன் பின் சூரத்துல் பாத்திஹா ஓதுவதற்கு முன்பதாக ஏன் சிறிது நேரம் தாமதம் செய்கிறார்? மெதுவாக எதுவும் ஓதுகிறாரா, அப்படி ஏதாவது ஓத வேண்டுமா என்பது தான் அவரது கேள்வி. தொழத் தொடங்கிய காலம் தொட்டு அது நாள் வரை அதைப் பற்றி யாரிடமாவது கேட்டு விளங்கிக் கொள்ள வேண்டுமென்று எத்தனையோ தடவைகள் எண்ணினாராம், ஆனால் சமய சந்தர்ப்பம் கிடைக்கவே இல்லையாம்.

அவரது கேள்விக்கு பதிலாக வஜ்ஜஹ்ஹைப் பற்றிய விளக்கத்தை, அதாவது ஷாபி மத்ஹபின் பிரகாரம் தொழுகையின் ஆரம்பத்தில் வஜ்ஜஹ்து ஓதுவது ஹைஆத் எனப்படும் அலங்கார சுன்னத்துகளில் ஒன்றாகும் என்ற விடயத்தை விபரமாக எடுத்து சொல்லியதுடன் அதனை

படித்து பாடமிட்டுக் கொள்ளும் பொருட்டு ஜமாஅத்தில் எம்முடன் சேர்ந்து வந்திருந்த அனுபவம் வாய்ந்த ஒரு சகோதரரை அவருக்கு உதவியாக சேர்த்துக் கொடுத்தோம். அவர் அதனை ஒரு நாளிலேயே பாடமிட்டு சரளமாகவும் திருத்தமாகவும் ஓதக் கூடியவராகி விட்டார்.

அதனுடைய அர்த்தத்தையும் கேட்டு தெரிந்து கொண்டார்.

வஜ்ஜஹ்தைப் பற்றி மேலும் ஒரு சம்பவம்.

தஃலீம் நிகழ்ச்சியில் குர்ஆன் ஹல்காவின் போது இலங்கை தப்லீகின் ஆரம்ப காலங்களில் சூரத்துல் பாத்திஹாவுடன் குர்ஆனின் இறுதிப் பகுதியில் அமைந் திருக்கும் இருபது சூராக்களை ஓதுவதுடன் வஜ்ஜஹ்து, குனூத், அத்தஹிய்யாத் ஓதிக் கொள்வதையும் தொழுகை உளூ குளிப்பு ஆகியவைகளின் விபரங்களை முதாக்கரா செய்வதையும் வழக்கமாக்கப்பட்டிருந்தது.

அரசாங்க அலுவலகம் ஒன்றில் பொறுப்பான உத்தி யோகத்தில் இருந்து வந்த ஒரு சகோதரர் அடியேனுடைய ஹல்காவில் அமர்ந்திருந்தார். ஜமாஅத்தில் வந்திருப்பது அது தான் அவருக்கு முதல் அனுபவம். நாற்பது வயது கொண்ட அவர் பதினைந்து வயது முதல் தொழுது வருபவர் என்று சொல்லிக் கொண்டார்.

அனைத்து சூராக்களையும் திருத்தமாக ஓதிய அவர் அத்தஹிய்யாத்தையும் குனுத்தையும் கூட நன்றாகவே ஓதினார். ஆனால் வஜ்ஜஹ்தில் மாத்திரம் ஒரேயொரு தவறு. எனினும் அது சாதாரண தவறல்ல. அர்த்தத்தையே தலைகீழாக மாற்றியமைக்கும் வகையில் அமைந்து விட்ட பாரதூரமான தவறு.

முஸ்லிம் என்ற இடத்தில் முஷ்ரிக் என்றும், முஷ்ரிக் என்ற இடத்தில் முஸ்லிம் என்றும் ஓதியதே அந்தத் தவறாகும்.

அதாவது முஸ்லிமை சேராத இணைவைப்பவராக இருக்கும் தன்மையிலுள்ளவனென்றும், இணைவைப்பவர்களிலுள்ளவனாக இருப்பவன் என்ற கருத்தில் தன்னை அல்லாஹ்வின் முன்னிலையில் அறிமுகம் செய்யும் வகையில், வஜ்ஜஹ்து வஜ்ஹிய லில்லதீ பத்தரஸ் ஸமாவாத்தி வல் அர்ள ஹனீபன் முஷ்ரிகன் வமா அன மினல் முஸ்லிமீன். இன்ன ஸலாத்தி வநுஸ்கி வமஹ்யாய வமமாத்தி லில்லாஹி ரப்பில் ஆலமீன். லாஷரிக்கலஹு வபிதாலிக்க உமிர்த்து வஅன மினல் முஷ்ரிகீன் என்பதாகவே அவரது ஓதல் அமைந்திருந்தது.

தொழ ஆரம்பித்த நாள் தொடக்கம் அப்படித்தான் அவர் ஓதி வந்திருக்கிறாராம். அந்தத் தவறை விளங்கிக் கொண்ட போது அவர் அடைந்த வேதனையும் காட்டிய கைசேதமும் கொஞ்சநஞ்சமல்ல.

தனது ஓதல்களில் உள்ள குறைபாடுகளை சரிபார்த்து திருத்திக் கொள்ளும் அமைப்பை அதுநாள் வரை சந்திக்க கிடைக்காததே தனது அந்த குறைபாட்டிற்கு காரணம் என்று காரணம் காட்டிய அவர்,

இப்படிப்பட்ட ஒரு முயற்சி மாத்திரம் இந்தக் காலத்தில் இல்லாதிருந்தால் எங்களைப் போன்ற வயது சென்று விட்டவர்களின் நிலமை என்னவாகி இருக்கும் என்று கேட்டு விட்டு இந்த ஜமாஅத் ஒரு மதரஸாவைப் போன்றே இயங்கக் கூடியதை பார்க்க முடிகிறது என்று சொல்லி வைக்கவும் தவறவில்லை.

# 4. ஹாபிஸுல் குர்ஆன்

1971-ம் ஆண்டு வட இந்தியாவில் தெஹ்ராடூன் என்ற ஊருக்கு ஜமாஅத்தில் சென்றிருந்த போது இடம் பெற்ற ஒரு சம்பவம்.

இருபந்தைந்து நபர்கள் கொண்ட அந்த ஜமாஅத்திற்கு டெல்லி நிஸாமுத்தீன் மர்கஸின் பெரியார்களுள் ஒருவராக பிரகாசித்துக் கொண்டிருந்த மஹான் மர்ஹூம் முன்ஸி அல்லாததா அவர்களின் மகனாகிய மௌலானா பஸ்லே இலாஹி என்பவர் அமீராக வந்திருந்தார். இலங்கையை சேர்ந்த நாங்கள் மூவர் இருந்தோம்.

காலையில் இடம் பெற்ற தஃலீம் நிகழ்ச்சி முடிவுக்கு வந்ததும் களைப்பாக இருந்ததால் சிறிது இளைப்பாற வேண்டுமென்றெண்ணி ஒரு ஓரத்திற்கு ஒதுங்க எத்தனித்த போது ஒருவர் என்னை நெருங்கி வந்து குர்ஆன் பிரதியொன்றை தந்து அவர் ஓதுவதை கொஞ்சம் சரி பார்க்கும் படி வேண்டிக் கொண்டார். இதே போன்று இன்னொருவரும் வேறொரு சகோதரிடம் வேண்டிக் கொண்டதையும் காண முடிந்தது. அந்த இருவரும் அன்று காலையில் தான் எங்களது ஜமாஅத்துடன் புதிதாக வந்து இணைந்து கொண்டனர். அவர்களது செய்கை எனக்கு பெரும் எரிச்சலை ஏற்படுத்தியது. எனினும் அதனை நான் காட்டிக் கொள்ளவில்லை.

அவர் பாராமல் ஓதத் தொடங்கினார். அதனை மிக மனக் கஷ்டத்துடன் சரி பார்த்துக் கொண்டிருந்தேன். அவரின் ஓதலில் எந்த விதமான பிழையையும் என்னால் கண்டு கொள்ள முடியவில்லை. மிகவும் சரளமாக ஓதினார். கிட்டதட்ட பதினைந்து நிமிடங்கள் வரை ஓதியிருப்பார். ஓதி முடிந்ததும் குர்ஆனை திருப்பிப் பெற்றுக் கொண்டு

மகிழ்ச்சி பொங்க எனக்கு நன்றி செலுத்திவிட்டு துஆவும் செய்தார். அவரது அந்த செய்கை என் உள்ளத்தை நெகிழ வைத்து விட்டது. ஆரம்பத்தில் இருந்ததைப் போன்றல்லாது அவரைப்பற்றி உயர்ந்த ஒரு எண்ணம் என் உள்ளத்தில் உருவாகுவதை என்னால் உணர முடிந்தது. எனவே அவரைப்பற்றி விசாரிக்கத் தொடங்கினேன்.

அவரும் மற்றவரும் மேவாத் பகுதியை சேர்ந்த வர்களாம் மேவாத் தீனுடைய உழைப்பில் மிகவும் பிரபல்யம் வாய்ந்த பல கிராமங்களை உள்ளடக்கிய பெரும் பகுதி என்பது தீனுடைய ஊழியத்தில் ஈடுபடக்கூடியவர்கள் பொதுவாக அறிந்து வைத்திருக்கும் ஒரு விடயமாகும். அவர்கள் இருவரும் ஊர் விட்டு ஊர் சென்று சிறிய அளவில் வியாபாரம் செய்து வருபவர்கள். ஒருவருக்கு முப்பத்தைந்து வயது, மற்றவருக்கு முப்பத்தெட்டு வயது. இருவருக்கும் ஹாபிஸுல் குர்ஆனாக வேண்டுமென்ற அவா. அவர்களுடைய கிராமங்களில் ஒவ்வொரு வீடுகளிலும் ஒரு ஹாபிஸாவது இருப்பது சர்வ சாதாரணமான ஒரு விடயமாகும். ஆனால் அவர்களோ திருமணமாகி குழந்தைகளைப் பெற்று குடியும் குடித்தனமுமாகி விட்டவர்கள். எனவே மதரஸா செல்ல முடியாத நிலை. அதனால் அவர்களுடைய இலட்சியத்தை அடைய அவர்கள் எடுத்த முடிவு இதுதான்.

அதாவது சிறிய அளவில் வியாபாரம் செய்வது. பொருட்கள் விற்பனையாகியதும் வியாபாரத்தை முடித்துக் கொண்டு குடும்ப செலவுக்காக அனுப்ப வேண்டியதை அனுப்பி விட்டு, மறுபடியும் வியாபாரம் செய்வதற்கு தேவையான அளவு பணத்தை ஒதுக்கி வைத்துக் கொண்டு, மிகுதியை எடுத்துக் கொண்டு அந்த ஊரில் நடமாடிக் கொண்டிருக்கும் ஏதாவதொரு ஜமாஅத்தில் இணைந்திருந்து, கொஞ்ச நாட்கள் இருந்து விட்டு

மறுபடியும் வியாபாரத்தை கவனிப்பதற்காக வேறொரு ஊருக்கு சென்று விடுவார்கள்.

ஜமாஅத்துடன் இணைந்திருக்கும் காலங்களில் கூட்டாக இடம் பெறும் பொதுவான நிகழ்ச்சிகள் நிறைவுக்கு வந்ததும் எஞ்சிய நேரங்களில் குர்ஆனை பாடமாக்குவதில் ஈடுபட தொடங்கி விடுவார்களாம். அப்படி செய்து வந்ததில் இதுவரை அல்குர்ஆனின் முக்கால் பகுதிக்கும் கூடுதலாக பாடமாகி விட்டதாகும். அந்த விபரங்களை கேட்டறிந்த போது ஆரம்பத்தில் என் உள்ளத்தில் அவர்களைப் பற்றி எழுந்த தவறான எண்ணத்தை எண்ணி வெட்கப்பட்டு வருத்தப் பட்டுக் கொண்டதுடன் அவர்களைப் பற்றி உயர்ந்ததோர் கண்ணியமும் எனதுள்ளத்தில் உருவெடுக்கத் தொடங்கி விட்டது. அத்துடன் ஹாபிஸாக வேண்டுமென்ற அவரது இலட்சியம் நிறைவேற விருப்பமில்லாதிருந்தும் அடியேனுக்கும் மிகச் சிறிய அளவிலாவது ஒரு பங்களிப்பை செய்வதற்கு சந்தர்ப்பத்தை தந்துதவிய அவருக்கும் அல்லாஹ்வுக்கும் என்னால் நன்றி செலுத்தாமல் இருக்க முடியவில்லை.

### குர்ஆன் ஓதிய பிறகு ஓதும் துஆ

اَللّٰهُمَّ اٰنِسْ وَحْشَتِيْ فِيْ قَبْرِيْ، اَللّٰهُمَّ
ارْحَمْنِيْ بِالْقُرْاٰنِ الْعَظِيْمِ وَاجْعَلْهُ لِيْ
اِمَامًا وَّنُوْرًا وَّهُدًى وَّرَحْمَةً، اَللّٰهُمَّ
ذَكِّرْنِيْ مِنْهُ مَا نَسِيْتُ وَعَلِّمْنِيْ مِنْهُ
مَا جَهِلْتُ وَارْزُقْنِيْ تِلَاوَتَهٗ اٰنَاءَ
اللَّيْلِ وَاٰنَاءَ النَّهَارِ وَاجْعَلْهُ لِيْ
حُجَّةً يَا رَبَّ الْعَالَمِيْنَ ۝

## 5. தஃலீமுல் குர்ஆன்

2001-ம் வருடம் சில்லாவுக்கு சென்றிருந்த சமயம் அடியேனுடைய ஜமாஅத்தில் வந்திருந்தவர்களுள் நான்கு நபர்களைப் பற்றிய ஒரு செய்தி.

ஒருவருக்கு 37 வயது, கூலி வேலை செய்யக்கூடியவர், நான்கு பிள்ளைகளுக்கு தந்தை.

மற்றவருக்கு 27 வயது, கட்டிட வேலை செய்பவர், மூன்று பிள்ளைகளுக்கு தந்தை.

அடுத்தவருக்கு இருபது வயது, கட்டிட வேலை செய்பவர்.

இந்த மூவரும் ஊவா மாகாணத்தின் மாணிக்க வியாபாரத்திற்கு பெயர்போன ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள்.

இன்னொருவருக்கு 34 வயது, கடற்தொழிலில் ஈடுபாடுள்ளவர், இவர் கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்தவர்.

இந்த நால்வரும் தங்களின் வாழ்வில் அல்குர்ஆனை ஒருபோதும் தொட்டே பார்த்திராதவர்கள். துன்யாவுடைய படிப்பறிவிலும் மிகவும் குறைந்தவர்கள்.

ஆனால், அல்லாஹ்வின் பாதையில் வந்திருந்தபோது கால நேரங்களை நல்ல முறையில் பயன்படுத்தி ஈமானையும், ஈமான்தாரிகள் செய்ய வேண்டிய அமல்களைப் பற்றியும், குர்ஆனையும் இளன்றளவு படித்துக் கொள்ள வேண்டும் என்ற ஒரு வைராக்கியத்துடன் காணப்பட்டனர்.

ஒவ்வொருவரும் அவர்களுடைய ஏரியா பொறுப்புதாரிகளின் வேண்டுகோளுக்கிணங்க ''தஃலீமுல் குர்ஆன்''

என்னும் பாலர்கள் பயிலும் ஆரம்ப கிதாபுகளை தம்முடன் கொண்டு வந்திருந்தனர். ஒவ்வொருவருடைய கைகளிலும் ஒரு நோட் புத்தகமும் இருந்தது.

எனவே, ஜமாஅத்தினர் அனைவரும் ஒன்றுசேர்ந்து கூட்டாக செய்ய வேண்டிய அமல்களுக்காக ஒதுக்கப் பட்டிருந்த நேரங்களைத் தவிர மீதமிருந்த நேரங்களை அவர்களுடைய நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் முழுமையாக ஈடுபடுத்துவதில் ஒவ்வொரு நாளும் மிகவும் கண்ணும் கருத்துமாக இருந்து வந்தனர். அந்த ஜமாஅத்தில் வந்திருந்த மாவனல்லை பகுதியைச் சேர்ந்த நடுத்தர வயதுடைய கண்ணியத்திற்குரிய ஒரு மௌலவி சாஹிபின் பங்களிப்பு அவர்களின் நோக்கத்தை அடைந்து கொள்ள பெரிதும் உதவியாக இருந்தது.

பகல் நேரங்களில் அவரை கொஞ்ச நேரம்கூட ஓய்வெடுக்க அவர்கள் விடுவதில்லை. அவரும் அதனை பொருட்படுத்தாது, அவர்களுக்கு பாடம் சொல்லிக் கொடுப்பதிலும், சொல்லிக் கொடுத்த பாடங்களை சரி பார்ப்பதிலும் ஆர்வத்துடன் நடந்து கொண்டு அதில் ஒருவித இன்பத்தை கண்டு வரலானார். கொஞ்சம்கூட சோர்வோ முகச்சுளிப்போ காட்டாது அவர் அந்த அப்பாவி மக்களுடன் நடந்து கொண்ட விதமானது ஆலிம்களுக்கோர் அழகிய முன்மாதிரியான செயலாக அமைந்திருந்ததை பெருமையுடன் இங்கு நான் குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த முயற்சியின் பயனாய் அல்குர்ஆனைப் பற்றி ஒன்றுமே தெரியாத நிலையில் வந்திருந்த அந்த நால்வரும் நாற்பது நாட்களுக்குள் திருத்தமான முறையில் சிறிய அளவில் அமைந்திருக்கும் பல சூராக்களை ஓரளவு

சரளமாக ஓதக்கூடிய ஆற்றலைப் பெற்ற பாக்கியவான்களாக மாறினார்களென்றால் நடமாடும் இந்த மதரஸாவின் மகிமையைப் பற்றி என்னென்று கூறுவது.

அது மாத்திரமல்லாது, சூரத்துல் பாத்திஹா, அத்தஹிய்யாத், வஜ்ஜஹ்து, குனூத் போன்றவைகளையும் திருத்தமாக பாடமிட்டுக் கொண்டதுடன் தொழுகைக் குண்டான ஷர்த், பர்ள், சுன்னத்துக்களின் விபரங்களையும் தீனுடைய மற்றுமுண்டான அவசியமான விடயங்களையும் படித்துக் கொள்ள முடிந்ததால் நடமாடும் இந்த மதரஸா வின் மகிமையை அனுபவ மூலம் அறிந்து கொண்ட அந்த நால்வரும் இன்னும் கூடுதலான பலாபலன்களை பெற்றுக் கொள்ளும் நோக்கத்துடன் அல்லாஹ்வின் பாதையில் பாடு படுவதற்காக மறுபடியும் கூடிய சீக்கிரம் வருவோம் என்ற உறுதியான நிய்யத்துடன் ஊர் திரும்பிச் செல்லலாயினர்.

**நபி (ஸல்) கற்றுத் தந்த சுருக்கமான துஆ**

اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ
نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَنَعُوْذُ
بِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ
صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَاَنْتَ الْمُسْتَعَانُ وَعَلَيْكَ
الْبَلَاغُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

யா அல்லாஹ்! உன்னுடைய திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் உன்னிடம் கேட்ட நன்மைகள் அனைத்தையும் நாம் உன்னிடம் இறைஞ்சுகிறோம். மேலும் உன்னுடைய நபி முஹம்மது (ஸல்) அவர்கள் உன்னிடம் பாதுகாப்புத் தேடிய தீமைகள் அனைத்தையும் விட்டு நாம் காவல் தேடுகிறோம். நீயே உதவி தேடப்படுகின்றவன். சகல தேவைகளையும் எத்தி வைப்பது உன் மீதுள்ள பொறுப்பு. பாவங்களிலிருந்து தப்பித்துக் கொள்வதும் எந்த நன்மையைச் செய்ய சக்தி பெறுவதும் அல்லாஹ்வைக் கொண்டேயல்லாது வேறில்லை.

# 6. ஜம்உ கஸ்ரு

மூன்று நாள் ஜமாஅத் ஒன்றில் சுமார் ஐந்து வருடங்களுக்குமுன் அடியேனுடன் இலங்கையின் மத்திய பகுதியில் அமைந்திருக்கும் உடுதெனிய என்ற ஊருக்கு வந்திருந்த நாற்பது வயது மதிக்கத்தக்க ஒரு சகோதரர் வாயிலாக வெளியாகி தெளிவுக்கு வரக்கூடியதாக அமைந்த முக்கியமான பாடத்தைப் பற்றியதொரு செய்தி இந்தப் பகுதியில் இடம் பெறுகிறது.

சந்தர்ப்பம் கிடைக்கும்போது இடைக்கிடை நாலைந்து தடவைகள் மூன்று நாள் ஜமாஅத்தில் மாத்திரம் போய் வந்திருக்கும் அவர், இலங்கையின் பல பாகங்களுக்கும் சென்று சிறிய அளவில் வியாபாரத்தில் ஈடுபட்டு வருபவர். பிரயாண நிமித்தம் சில வேளைகளில் தொழுகையை குறித்த வக்தில் தொழ முடியாதவாறு தவற விடவேண்டிய நிலை ஏற்பட்டு விடுகிறது என்பது அவரது உள்ளத்தை உருத்தும் ஒரு விடயமாக இருந்து வருகிறது என்று சொல்லிக் கொண்டார்.

தஃலீம் மஜ்லிஸில் அமர்ந்திருக்கையில் தொழுகை சம்பந்தமான குர்ஆன் ஹதீஸ் விளக்கங்களை, குறிப்பாக தொழுகையை விடுபவர்கள், விட்டு விட்டு தொழக் கூடிய வர்கள், களாச் செய்பவர்கள், தொழுகையின் விடயத்தில் பொடுபோக்குடன் நடந்து கொள்பவர்கள் ஆகியோரை அண்டயவிருக்கும் பரிதாபகரமான விளைவுகளைப் பற்றிய எச்சரிக்கைகளை கேட்கும்போதெல்லாம் கவலை உண்டாகி மனம் வேதனையடைய ஆரம்பித்து விடுகிறது என்பது அவருடைய முறைப்பாடு. எனவே, அதற்கான பரிகாரம் எதுவும் இருக்கிறதா என்பதுவே அவர் கேட்டு நின்ற கேள்விகளில் ஒன்றாக இருந்தது.

இஸ்லாம் என்பது சம்பூரணமான வாழ்க்கை வழிமுறை களை உள்ளடக்கிய மார்க்கமாக அமைந்திருக்கையில்

எந்தப் பிரச்சினைக்காவது இஸ்லாத்தில் பரிகாரம் இல்லை யென்று சொல்ல முடியுமா?

இஸ்லாத்தில் கடமையாக்கப்பட்டுள்ள அனைத்து கடமைகளையும், அது ஹுக்கூக்குல்லாஹ் - அல்லாஹ் வுக்கு செய்ய வேண்டிய கடமைகளாக இருக்கட்டும், அல்லது ஹுக்கூக்குல் இபாத் - அடியார்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளாக இருக்கட்டும், எல்லா நிலைமை களிலும் அவைகளை நிறைவேற்றுவதற்குண்டான வழி முறைகளை அழகான வகையில் ஷரீஅத்தில் சட்டதிட்டங் களின் வாயிலாக இமாம்கள் என்ற அந்தஸ்தை அடைந்து நிற்கின்ற மார்க்க அறிஞர்களைக் கொண்டு வடிவமைத்து எழுதி வைக்கப்பட்டே உள்ளது.

அந்த வகையில் அவரது கேள்விக்கு பதிலாக ''கஸ்ரு'' என்ற சுருக்கித் தொழுதல், ''ஜம்உ'' என்ற சேர்த்துத் தொழுதல் என்கின்ற அடிப்படையில் பிரயாணத்திலுள்ள வர்களுக்காக ஷரீஅத்தின் மூலம் ஏற்படுத்தி தரப்பட்டுள்ள சலுகைகளைப் பற்றிய விளக்கங்களை கீழ்காணும் பிரகாரம் விபரமாக சொல்லிக் கொடுக்க தொடங்கினோம்.

''கஸ்ரு'' என்பது நான்கு ரக்கஅத்துகள் கொண்ட ளுஹர், அஸர், இஷா ஆகிய தொழுகைகளை இரண்டு ரக்கஅத்துகளாக சுருக்குவதாகும். ஆனால், சுபுஹுவையும், மஃரிபையும் சுருக்க முடியாது.

''ஜம்உ'' என்பது ளுஹரையும் அஸரையும், அது போன்று மஃரிபையும் இஷாவையும் சேர்த்துத் தொழுவ தாகும்.

இதில் இரண்டு வகை உண்டு.

ளுஹரையும் அஸரையும் சேர்த்து ளுஹர் வக்திலும், மஃரிபையும் இஷாவையும் சேர்த்து மஃரிபு வக்திலும் முற்படுத்தி தொழுவதை ''ஜம்உ தக்தீம்'' என்று முதல் வகையாகவும்,

ளுஹரையும் அஸரையும் சேர்த்து அஸர் வக்திலும், மஃரிபையும் இஷாவையும் சேர்த்து இஷா வக்திலும் பிற்படுத்தி தொழுவதை ''ஜம்உ தஃகீர்'' என்று இரண்டாம் வகையாகவும் அமைத்து தரப்பட்டுள்ளது.

''ஜம்உ'' என்ற அடிப்படையில் சேர்த்துத் தொழும் பொழுது நான்கு ரக்கஅத்துகள் கொண்ட தொழுகைகளை இரண்டு ரக்கஅத்துகளாக சுருக்கியே தொழ வேண்டும்.

கஸ்ரு ஜம்உ என்ற இந்த சலுகையை மார்க்கத்திற்கு விரோதமில்லாத வகையில் 56 மைல்களுக்கு (89 கிலோ மீட்டர்) குறையாத பிரயாணத்தை மேற்கொள்ளும் போதே செயல்படுத்த முடியும் என்பதையும், தனது ஊர் எல்லையை கடந்ததன் பின்னரே இந்த சலுகையை பயன்படுத்த முடியும் என்பதையும் கவனத்தில் கொள்ளல் வேண்டும்.

எனினும் நிய்யத் செய்தல், இதன் பர்ள் ஷர்த் நிபந்தனைகள் போன்ற முழுமையான விளக்கத்தை உலமாக்களை அணுகி விளங்கிக் கொள்வதே சாலச் சிறந்த செயலாகும் என்பதை கூறி வைக்க விரும்புகிறோம்.

அடியேனின் ஆரம்ப கால தப்லீக் பிரயாணங்களுக்காக இலங்கையில் தூர இடங்களில் அமைந்திருக்கும் ஊர் களுக்கே அதிகமாக மூன்று நாள் ஜமாஅத்துகளில் போய் வரக்கூடிய பழக்கம் இருந்ததால், அதுவும் பஸ் அல்லது ரயில் பிரயாணமாகவே இருந்ததாலும் அவ்வாறான சந்தர்ப்பங்களில் ஜம்உ கஸ்ரு என்கின்ற இந்த பாடத்தை படித்து தெரிந்து கொள்ள வேண்டிய தேவை அடியேனுக்கு ஏற்பட்ட போது அதனை அல்லாஹ்வின் பாதையில் சென்றிருந்த சமயங்களில் நடமாடும் இந்த மதரஸாவின் மூலமாகவே படித்துக் கொள்ளக்கூடிய வாய்ப்பை பெற்றுக் கொள்ள முடிந்தது என்பதும் குறிப்பிடப்பட வேண்டிய ஒரு செய்தியாகும்.

# 7. ஹஜ்ஜுக் கடமை

1995ம் ஆண்டு தனது மனைவியுடன் ஹஜ் கடமையை நிறைவேற்றுவதற்கு தயாராகிக் கொண்டிருந்த சுமார் நாற்பது வயது மதிக்கத்தக்க சகோதரர் ஒருவர் முதல் தடவை யாக ஒரு ஜமாஅத்துடன் இணைந்து அடியேனுடன் வந்திருந்தார்.

ஹஜ் சம்பந்தமாக அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய விடயங்களை படித்துக் கொள்ளும் நாட்டத்துடனேயே ஜமாஅத்தில் வந்திருப்பதாக சொல்லிக் கொண்டார்.

தப்லீக் என்ற பெயரில் இன்று மக்கள் மத்தியில் நடமாடிக் கொண்டிருக்கும் ஜமாஅத்தில் சேர்ந்து போவதின் மூலம் ஹஜ்ஜைப் பற்றிய விபரங்களை இலகுவாகவும் விளக்கமாகவும் தெரிந்து கொள்ள முடியும் என்ற நண்பர் ஒருவரின் யோசனைக்கிணங்கவே அவர் அந்த ஜமாஅத் தில் வந்திருப்பதாகவும் சொல்லிக் கொண்டார். எனவே, அவரது தேவையை இயன்றவரை பூர்த்தி செய்வது அவசிய மான ஒரு விடயமாக எங்களுக்கு அமைந்து விட்டது.

எமது ஜமாஅத்தில் வந்திருந்த ஒரு பழையவர், அனுபவசாலி. ஹாஜியும்கூட. அவரும் அடியேனும் சேர்ந்து அவருக்கு உதவ முன்வந்தோம். ஜமாஅத்தில் இருக்கும் காலங்களில் இடம்பெறும் கூட்டான அமல்கள் நிறைவு பெற்றதும் மீதமுள்ள நேரங்களை அவருக்காக பயன் படுத்துவதென்று முடிவு செய்து கொண்டோம்.

இதற்கிடையில் முதலாம் நாள் காலையில் தஃலீம் நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வேண்டிய நேரம் வந்தபோது ஜமாஅத்தில் வந்திருந்த அனைவரும் ஒன்று சேர்ந்து தஃலீம் நடைபெறும் ஹல்காவில் போய் உட்கார்ந்து கொண்டோம். அமல்களின் சிறப்புக்கள் வாசித்துக் கேட்ட தன்பின், அடுத்து இடம்பெற வேண்டிய ''குர்ஆன் ஹல்கா''

வுக்காக எழுந்து நன்நான்கு நபர்களாக பிரிந்து வெவ்வேறு இடங்களில் போய் வட்டமாக உட்கார்ந்தபோது இந்த சம்பவத்தில் சம்பந்தப்பட்ட சகோதரரும் அடியேனும் ஒரே ஹல்காவில் உட்கார்ந்தோம்.

வழமைபோல் ஆரம்பமாக சூரா பாத்திஹாவை ஓதத் தொடங்கினோம். முதலில் அடியேன் தொடங்க, தொடர்ந்து எனக்கு அடுத்திருந்தவர் ஓதியதும், அவருக்கு அடுத்ததாக அமர்ந்திருந்த இவர், ஓத வேண்டுமா என்று கேட்கும் தோரணையில் என்னைப் பார்த்தார். ஓதுங்கள் என்று நானும் அதே பாணியில் சைக்கினை செய்ததும் ஓதத் தொடங்கினார். மெதுவான தொணியில் ஓதியதால் மற்றவர் களால் அதனை தெளிவாக கேட்க முடியவில்லை. ஆனால், நான் கூர்ந்து செவிமடுத்ததால் ஓரளவு என்னால் அவருடைய ஓதலின் தரத்தை விளங்கிக் கொள்ள முடிந்தது. அவருடைய ஓதல் திருப்தியாக அமைந்திருக்கவில்லை.

அடுத்து, மற்றைய சூராக்களை ஓதிய போதெல்லாம் ஓதுவதிலிருந்து அவர் தவிர்ந்து கொள்ளக் கூடியவராகவே இருந்தார். தப்லீகுடைய பயணத்தின் போது நினைவூட்டக் கூடிய உஸூல்களின் பிரகாரம் நாங்களும் அவரை ஓதும்படி வற்புறுத்தவில்லை. ஆனால் அவருடைய அந்த செய்கை யானது முறைப் பிரகாரம் ஓதுவதில் சில குறைபாடுகள் இருப்பதால் கூச்சம் அவரை ஓத விடாமல் தடுக்கக் கூடியதாக இருக்கிறது என்பதை எங்களால் நன்றாக விளங்கிக் கொள்ள முடிந்தது. எனவே, ஹஜ்ஜைப் பற்றி படித்துக் கொள்ள வந்த அவருக்கு முதலில் தொழுகை யைப் பற்றியும் மற்றுமுண்டான அவசியத் தேவைகளில் கவனம் செலுத்தப்பட வேண்டியதன் அவசியத்தை உணரலானோம். அதன் பிரகாரம் ஏற்கனவே குறிப்பிட்ட ஹாஜியை அவருடன் இணைத்து அவருக்கு உதவியாக இருந்து செயல்படும்படி கேட்டுக் கொண்டோம்.

''ஆறு நம்பர் முதாக்கரா''வும் முடிந்து தஃலீம் நிகழ்ச்சி நிறைவு பெற்றதும், அவர் அவரை அழைத்துக் கொண்டு ஒரு ஓரத்தில் போய் ஒதுங்கியிருந்து அவருடன் சில முதாக்கராக்களில் ஈடுபடத் தொடங்கினார்.

நுணுக்கமாகவும் நளினமாகவும் அணுகும் விடயத்தில் அனுபவத்தின் வாயிலாக ஆற்றல் படைத்த அவரால் அரை மணி நேரத்திற்குள் அவரைப் பற்றிய அதிகமான விடயங் களை அறிந்து கொள்ள முடிந்தது.

பாவம்! பல காலமாக தொழுது வந்திருக்கும் அவர் தொழுகையின் அதிகமான விடயங்களில் திருத்தம் செய்யப் பட வேண்டிய அவசியத்தை அவரே விளங்கிக் கொள்ளும் வகையில் அந்த முதாக்கரா அமைந்திருந்ததை எண்ணிப் பார்த்தபோது ஈமானுடைய இந்த உழைப்பின் நுணுக்கத்தை பாராட்டாமல் அவரால் இருக்க முடியவில்லை.

மூன்று நாட்களும் தொடர்ந்து அவருடைய விடயத் தில் ஹாஜியுடன் அடியேனும் சேர்ந்து அதிக அக்கறை எடுத்துக் கொண்டதன் பயனாக பல பிரயோஜனங்களை அவரால் அடைந்து கொள்ள முடிந்தது.

வெட்கத்தை விட்டு மனஓர்மையுடன் ஒவ்வொரு விடயத்தையும் கேட்டுக் கேட்டு திருத்திக் கொள்ளவும் தேவையான விடயங்களை கேட்டு தெரிந்து கொள்ளும் வகையிலும் அவருடைய அணுகுதலில் பெரும் முன்னேற்றம் காணப்படலாயிற்று. ஹஜ்ஜைப் பற்றிய விளக்கத்தையும் அவரால் பெற்றுக் கொள்ள முடிந்தது.

குறிப்பிட்ட சில வணக்க வழிபாடுகளை நிறைவேற்று வதற்காக புனிதமிகு கஃபாவை நாடிச் செல்வதே ஹஜ் எனப்படும்.

உடல், பொருள், மற்றும் வழிப்பாதையில் சக்தி பெற்றிருக்கும் ஒவ்வொரு முஸ்லிம் ஆண் பெண் அனை வரும் தம் வாழ்நாளில் ஒரு தடவையாவது அல்லாஹ் வுக்காக ஹஜ் செய்வது இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமை களுள் ஒன்றாகும்.

ஹஜ்ஜை நிய்யத் செய்து இஹ்ராம் கட்டுதல், தவா ஃபுல் இஃபாழா செய்தல், அரபாவில் தங்குதல், ஸயீ செய் தல், தலைமுடி களைதல் ஆகியவை ஹஜ்ஜின் பர்ளாகவும், மீகாத்தில் இஹ்ராம் கட்டுதல், அரபாவிலிருந்து மினா விற்கு திரும்பி வருகையில் முஸ்தலிஃபாவில் இரவு தங்கு தல், துல்ஹஜ் பிறை 10,11,12,13 ஆகிய நாட்களில் மினா வில் தங்குதல், இம்மூன்று நாட்களிலும் மூன்று ஜம்ரத்து களில் கல் எறிதல், தவாஃபுல் விதா செய்தல் ஆகியவை ஹஜ்ஜின் வாஜிபாகவும் அமைத்து வைக்கப்பட்டுள்ளன.

தமத்துஃ, கிரான், இஃப்ராத், இன்ஃபிராத் என்ற நான்கு வகையான இஹ்ராமைப் பற்றிய விபரங்களையும் விளக்கியதுடன் இஹ்ராம் கட்டும் முறை,

لَبَّيْكَ اللّٰهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لَاشَرِيْكَ لَكَ
لَبَّيْكَ اِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ
لَاشَرِيْكَ لَكَ

என்ற தல்பியாவை ஓதும் முறை, தவாப் செய்தல், அதில் ஓத வேண்டிய துஆக்களும் ஏனைய திக்ருகளும், ஸயீ செய்தல், அதில் ஓத வேண்டியவைகள் இப்படியாக ஹஜ்ஜுடைய கிரிகைகளில் செய்ய வேண்டிய அனைத்தை யும் விபரமாக அவருக்கு எடுத்து சொல்லப் பட்டதுடன் அவ்வப்போது ஓத வேண்டிய அவசியமான துஆ, திக்ர் போன்றவற்றையும் எழுதி கொடுக்கப்பட்டதும் திருப்தி யுடன் அவர் திரும்பிப் போகலானார்.

ஆக, வந்ததோ வாழ்வில் ஒரேயொரு தடவை நிறை வேற்ற வேண்டிய கடமையைப் பற்றி படித்துக் கொள்வ தற்காக. ஆனால், படித்துக் கொண்டதோ வாழ்நாளில் ஒவ்வொரு நாளும் நிலைநாட்டப்பட வேண்டிய பல விடயங்களைப் பற்றி என்பது அவரே சொல்லி வைத்த விமர்சனமாகும்.

## 8. திருமணத்தைப் பற்றி தெரிந்து கொள்ள வந்த வாலிபரின் விடயம்

சுமார் ஏழு வருட காலமாக மத்திய கிழக்கு நாடொன்றில் உத்தியோகம் பார்த்து வந்த முப்பது வயது வாலிபர் ஒருவரின் சங்கதியைக் கூறும் சம்பவமே இது. முதல் தடவையாக அவர் மூன்று நாள் ஜமாஅத் ஒன்றில் அடியேனுடன் சேர்ந்து வந்திருந்தார்.

இன்னும் இரண்டு வாரங்களில் அவருக்கு திருமணம் நடைபெற இருக்கிறதாம். திருமணம் பற்றிய விபரங்களை முழுமையாக விளங்கிக் கொள்ளும் ஆவலுடன் வந்திருப்ப தாகவும், நண்பர் ஒருவரின் தூண்டுதலின் பேரிலேயே ஜமாஅத்தில் வர முடிந்ததாகவும் சொல்லிக் கொண்டார்.

அதற்கு முன் எத்தனையோ தடவைகள் அவரை ஜமா அத்தில் வரும்படி நண்பர்கள், மஹல்லாவாசிகள் அழைத் தார்களாம். ஆனால் சந்தர்ப்பம் கிடைக்கவேயில்லையாம். இந்தத் தடவை சந்தர்ப்பம் மாத்திரமல்ல தேவையும் ஏற்பட்டி ருப்பதால் வர முடிந்தது என்றும் சொல்லிக் கொண்டார்.

பதுளை ஜும்மா பள்ளிக்கே அன்று நாங்கள் சென்றி ருந்தோம். அடியேனுடைய நீண்டகால நண்பரான மர்ஹூம் மௌலவி சர்தார் கான் அவர்களே அங்கு அப்போது பள்ளியின் பிரதம இமாமாக கடமையாற்றிக் கொண்டிருந்தார்.

வாலிபரை அவருக்கு அறிமுகம் செய்து வைத்து அவருடைய நிலைமையையும் விவரித்து கூட்டாக இடம் பெறும் அமல்கள் நிறைவு பெற்றதன் பின் எஞ்சியிருக்கும் நேரங்களின் போது தேவையானதை சொல்லிக் கொடுத்து உதவும்படி கேட்டுக் கொண்டதும் அதை ஒரு பெரும் பாக்கியமாகக் கருதி மிக்க மகிழ்வுடன் ஒத்துக் கொண்டார்.

இதற்கிடையில் காலை பத்து மணியளவில் தஃலீம் நிகழ்ச்சி ஆரம்பமானது. வழமைபோல் அமல்களின் சிறப்புக்கள் வாசித்ததன் பின் குர்ஆன் ஹல்காக்கள் அமைக்க முற்பட்டபோது அந்த வாலிபர் சபையிலிருந்து எழுந்து பள்ளியை விட்டு வெளியேறி மலஜல கூடத்தை நோக்கி செல்லலானார்.

குர்ஆன் ஹல்காக்கள் சுமார் இருபத்தைந்து நிமிடங்கள் வரை நடந்தன. ஆனால் அவை முடிவுற்ற பின்னரே வெளியே சென்றிருந்த வாலிபர் திரும்பி வந்து சபையில் அமரலானார். எனினும் அதைப் பற்றி யாரும் எதுவும் சொல்லிக் கொள்ளவில்லை. அவரிடம் கேட்கவுமில்லை.

முதல் நாள் முடிந்து இரண்டாம் நாள் நிகழ்ச்சிகள் ஆரம்பமாகி குர்ஆன் ஹல்கா நடைபெற தொடங்கிய சமயத்தில் முன்னைய நாள் போன்றே அன்றும் சபையிலிருந்து எழும்பி வெளியே செல்லத் தொடங்கினார். அப்போதுதான் அவரை பொறுப்பெடுத்த பள்ளியின் இமாமவர்கள் முதல் நாளன்று வாலிபருடன் கதைத்துப் பார்த்தபோது விளங்கிக் கொண்ட அவரைப் பற்றிய ஒரு சில செய்திகளை அடியேனிடம் சொல்லலானார்.

மார்க்க அறிவைப் பொறுத்த வரையில் பூஜ்யமாக இருந்ததைத் தான் அவரில் அவரால் அவதானிக்க முடிந்ததாம்.

தொழுகையைப் பற்றிய அவசியமான விடங்களைக் கூட அறிந்தவராக இல்லாத நிலையில் இருந்த அவருக்கு அதைப் பற்றிய சில முக்கியமான சட்டதிட்டங்கள், பர்ள், சுன்னத் பற்றிய விளக்கங்களை எடுத்துச் சொன்னதுடன் சுத்தம், குளிப்பு போன்ற விடயங்கள் பற்றியும் அவருக்கு சொல்லிக் கொடுக்க வேண்டிய தேவை ஏற்படலாயிற்று என்றும் கூறிய மௌலானா, கொஞ்சம் கூச்சமுள்ளவராக

காணப்பட்டாலும் சொல்லிக் கொடுப்பதை ஆர்வத்துடனும் கவனமாகவும் கேட்கக் கூடியவராக இருந்தது பாராட்டப்பட வேண்டிய ஒரு விஷயமே என்றும் அவரைப் பற்றி சொல்லி வைத்தார்.

அன்றிரவு நித்திரைக்குப் போகுமுன் வாலிபரை என் பக்கம் அழைத்து சினேகபூர்வமான முறையில் சிறிது அளவ லாவத் தொடங்கினேன். அவரைப் பற்றி அவர் கூறிய விடயங்களை கேட்ட போது அவர் மேல் அடியேனுக்கு ஒரு வித பாசமும் அனுதாபமும் ஏற்படக்கூடியதாக அமைந்து விட்டது.

உலகக் கல்வியில் நன்றாக கவனம் செலுத்தி ஒரு கணக்காளராக தகுதி பெற்று உயர்ந்ததோர் உத்தி யோகத்தை வகிக்கும் அளவுக்கு உயர்ந்திருக்கும் அவர், மார்க்கக் கல்வியின் பக்கம் கொஞ்சம்கூட அக்கறை காட்டாத வகையில் ஆரம்ப முதல் அவரது வாழ்வு அமைந்து விட்டதை நினைத்து தற்போது தான் கவலை உண்டாகி இருக்கிறது என்று சொல்லிக் கொண்டதுடன் தனது பெற்றோர்களே தனது இந்த பின்னடைவுக்கு காரணமாக இருந்ததை நினைத்து வருந்துவதாகவும் சொன்னார். தனது உலகக் கல்விக்காக அவர்கள் எடுத்துக் கொண்ட சிரமங்கள் கொஞ்ச நஞ்சமல்ல என்று விளக்கப்படுத்திய அவர் அதில் ஒரு சிறு பகுதியையேனும் மார்க்க கல்விக்காக கவனம் செலுத்த வைக்க முடியாமல் போனது அவர்களிடம் குடி கொண்டிருந்த அறியாமையையே எடுத்துக்காட்டக் கூடிய தாக இருக்கிறது என்று கண்களில் நீர் மழ்கக் கூறி கைசேதப் படலானார். அல்லாஹ்தான் அவர்களுடைய பாவங்களை மன்னிக்கனும் என்று சொன்னதுடன் 'அமீர் சாப்' தயவு செய்து அவர்களுக்காக துஆச் செய்யுங்கள் என்று சொல்லி என் கைகளைப் பிடித்து சிறு குழந்தை போல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விட்டார்.

ஆறுதல் கூறி அவரை சமாதானப்படுத்த பெரும் சிரத்தை எடுக்க வேண்டியதாயிற்று.

அல்ஹம்துலில்லாஹ், மறுநாள் எல்லா நிகழ்ச்சிகளிலும் முழுமையாக கலந்து கொள்ளக்கூடிய அளவு ஆர்வம் காட்டக்கூடியவராக இருந்ததை அவதானிக்க முடிந்தது.

திருமணத்தைப் பற்றி அவசியம் தெரிந்து வைத்திருக்க வேண்டிய விபரங்களைக்கூட தெரிந்தவராக அவர் இருக்கவில்லை. எனவே, திருமணத்திற்கு முன்பதாகவே பெண்ணை பார்த்துக் கொள்வது, நிக்காஹ்வை மஸ்ஜிதில் நடத்துவது, மஹர் கொடுப்பது, நிக்காஹ் முடிந்ததும் பெண்ணை சந்திக்கும் முதல் சந்தர்ப்பத்தில் பெண்ணின் நெற்றி உரோமங்களை பிடித்தவாறு

பாரக்கல்லாஹு லிகுல்லி மின்னா ஃபீ ஸாஹிபிஹி

நம்மிருவரில் ஒவ்வொரு வரிடமிருந்தும் நமக்காக அல்லாஹ் பரக்கத் செய்வானாக என்று ஓதவேண்டிய துஆ, மனைவியுடன் உடலுறவு கொள்வதற்கு முன் ஓத வேண்டிய துஆ

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطٰنَ وَجَنِّبِ
الشَّيْطٰنَ مَارَزَقْتَنَا

அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு ஆரம்பிக்கின்றேன். யா அல்லாஹ்! எங்களை ஷைத்தானுடைய தீங்கை விட்டும் தூரமாக்கி வைப்பாயாக! இன்னும் இதனால் எங்களுக்கு அளிக்கும் சந்ததிகளையும் ஷைத்தானை விட்டும் தூரமாக்கி வைப்பாயாக!

வலீமா கொடுப்பது, கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் ஆடையாக விளங்குபவர்கள் என்று குர்ஆன் கூறும் விளக்கம், ஜனாபத் குளிப்பின் விபரங்கள், தன் மனைவிக்கு நல்லவனாக இருப்பவனே மனிதர்களில்

சிறந்தவர் என்ற நபி (ஸல்) அவர்களின் விளக்கம் இப்படியாக சில விளக்கங்களை விபரமாக எடுத்துச் சொல்லி அவரது தேவை பூர்த்தி செய்யப்பட்டது. இவைகளையெல்லாம் தெரிந்து கொண்டபோது அவருக்கு ஏற்பட்ட திருப்தியும் மகிழ்ச்சியும் கொஞ்ச நஞ்சமல்ல.

வந்ததோ திருமணத்தைப் பற்றிய விளக்கங்களை விளங்கிக் கொள்வதற்காக. ஆனால், முஸ்லிம் என்ற வகையில் அவர் அறிந்து வைத்திருக்க வேண்டிய விடயங்களோ எவ்வளவோ இருக்கின்றனவே என்ற உணர்வை உண்டாக்க அந்த மூன்று நாள் ஜமாஅத் அவருக்கு பெரிதும் உறுதுணையாக அமைந்ததால் திருமணத்திற்குப் பிறகும் தொடர்ந்து மாதாமாதம் மூன்று நாள் ஜமாஅத்தில் இணைந்து வரத் தொடங்கி மிகப் பெரும் பலாபலன்களை அடைந்து கொள்ளும் பாக்கியத்தை பெறக் கூடியவராக மாறலானார்.

## தொழுகைக்குப் பிறகு ஓதும் துஆக்கள்

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ
تَبَارَكْتَ يَاذَا الْجَلَالِ وَالْاِكْرَامِ

யா அல்லாஹ்! நீயே சாந்தியளிப்பவன்! சாந்தி உன்னிலிருந்தே கிடைக்கின்றது. நீ மகா பரக்கத்தானவன். சிறப்பும் கண்ணியமும் மிக்கவனே!

اَللّٰهُمَّ اِنِّیْ اَسْئَلُكَ عِلْمًا نَافِعًا وَّرِزْقًا وَّاسِعًا
وَّعَمَلًا مُّتَقَبَّلًا وَّشِفَاءً مِّنْ كُلِّ دَاءٍ

யா அல்லாஹ்! நான் உன்னிடம் பயனுள்ள இல்மையும், விரிவான இரணத்தையும், ஒப்புக் கொள்ளப்படும் அமலையும் சகல வியாதிகளிலிருந்து சுகத்தையும் இறைஞ்சுகிறேன்.

# ೧. கேட்டுக் கேட்டு படித்துக் கொண்ட வாலிபர்

கால நேரங்களை ஒதுக்கி அல்லாஹ்வின் பாதையில் வெளியாகி ஈமானுடைய உழைப்பில் ஈடுபடும் சந்தர்ப் பங்களில் வீண் பராக்கில் கவனம் செலுத்தாது பக்குவமாக நேரத்தை பயன்படுத்துவதில் கண்ணும் கருத்துமாக இருந்து முன்மாதிரியாகவும் உதாரணமாகவும் நடந்து கொண்ட தனியார் துறையொன்றில் உயர்ந்ததோர் உத்தியோகத்தில் இருந்து வந்த ஒரு வாலிபரைப் பற்றிய சுவாரஷ்யமான சில விபரங்கள் இந்தப் பாடத்தில் இடம் பெறுகின்றன.

கூடுதலாக பேசும் பழக்கமுடையவராக இருந்தாலும் அவைகள் வீண் பேச்சுக்கள் என்று சொல்ல முடியாத வகையை சேர்ந்தவையாக இருந்தமையினால் அவருடன் அனுசரித்தும் இதமாகவும் நடந்து கொள்ள வேண்டியவர் களாக இருந்தோம்.

நாலைந்து தடவைகள் ஜமாஅத்தில் சென்று வந்திருக் கும் அவர் அடியேனுடன் இணைந்து வந்திருந்தது அதுவே முதல் தடவையாகும்.

ஜமாஅத்தில் வந்திருந்த ஒவ்வொருவரிடமிருந்தும் வெளிப்படக்கூடிய ஒவ்வொரு நடவடிக்கைகளையும் நல்ல எண்ணத்துடன் மிகவும் உன்னிப்பாக கவனிப்பதை கடமை யைப் போன்று கருதி நடந்து கொண்ட அவரின் வாயிலாக வெளிச்சத்திற்கு வந்த சில விடயங்களை வாசகர்களின் நன்மையை கருதி இங்கு எழுதுகிறேன்.

ஜமாஅத் தொழுகையின் போது அதிகமாக அவர் அடியேனுக்கு அடுத்தாற் போல் நின்றே தொழக்கூடியவராக இருந்து வந்தார்.

ஒரு தடவை சுபஹுத் தொழுகையின் போது அடியே னிடம் கவனித்த ஒரு விடயத்தைப் பற்றி விளக்கம் கேட்கும் தோரணையில்,

அமீர் சாஹிப்! சுபஹ் தொழுகை முடிந்ததும் பிழை பொறுத்தல் எனும் இஸ்திஃபார் செய்ய வேண்டும் என்பதை விளங்கி இருக்கிறேன். அதன்படி வழக்கமாக அதனை செய்தும் வருகின்றேன். அதற்கு அவ்வளவு நேரம் தேவை யில்லை. ஆனால், தாங்களோ கைவிரல்களைக் கொண்டு எண்ணுவதைப் போன்று பாவனை செய்து நீண்ட நேரம் ஏதோ ஓதுவதை பார்க்கிறேன். அதைப் பற்றிய விளக் கத்தை கூற முடியுமா? என்று கேட்டு நின்றார்.

அதற்கு, சுபஹுத் தொழுகையையும் மஃரிபு தொழுகையையும் நிறைவேற்றியவுடன் அத்தஹிய்யாத் துக்காக அமர்ந்திருந்த அமைப்புக் குலையாமல் இருந்தவாறு

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ
وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

என்ற கலிமாவை பத்து விடுத்தம் ஓதிக் கொள்வது ஹதீஸில் சொல்லி வைக்கப்பட்டிருக்கும் முக்கிய ஒரு சுன்னத்தான வழிமுறையாகும். அவ்வாறு ஓதி வருபவ ருக்கு பத்து பாவங்கள் மன்னிக்கப்படுவதாகவும், பத்து நன்மைகள் பதியப்படுவதாகவும், பத்து அந்தஸ்துக்கள் உயர்த்தப்படுவதாகவும் வாக்களிக்கப்பட்டுள்ளது என்பதும் நபிமொழிகளில் காணப்படும் ஒரு மணிமொழியாகும்.

அத்துடன் இவ்விரு தொழுகையின் பின்னர் ஏழு தடவை ''அல்லாஹும்ம அஜிர்னி மினன்னார்'' என்று நரக

நெருப்பை விட்டு பாதுகாவல் தேடுவதுடன் இதெல்லாம் ஓதுவதற்கு முன் ஒவ்வொரு பர்ளான தொழுகையை நிறைவேற்றியவுடன் ''யா அல்லாஹ்! உன்னிடத்தில் மன்னிப்புக் கோருகிறேன்'' என்ற பொருள் கொண்ட

أَسْتَغْفِرُ اللهَ

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ
تَبَارَكْتَ يَاذَا الْجَلَالِ وَالْإِكْرَامِ

யா அல்லாஹ்! நீயே சாந்தியளிப்பவன்! சாந்தி உன்னிலிருந்தே கிடைக்கின்றது. நீ மகா பரக்கத்தானவன். சிறப்பும் கண்ணியமும் மிக்கவனே!

என்பதையும் ஓதிக் கொள்ள வேண்டும். அதன் பிறகு

لَآ اِلٰهَ اِلَّا اللهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ لَهٗ لَهُ الْمُلْكُ
وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

என்ற கலிமாவுடன் ''யா அல்லாஹ்! நீ கொடுத்ததை எவராலும் தடுக்க முடியாது. நீ தடுத்ததை எவராலும் கொடுக்க முடியாது. செல்வந்தனின் செல்வம் உன்னிடமிருந்து கிடைக்கும் தண்டனையிலிருந்து காத்துக் கொள்ள பயனளிக்காது'' என்ற அர்த்தம் கெண்ட

اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا اَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا
مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

என்ற துஆவையும் ''யா அல்லாஹ்! உன்னை நினைப்பதற்கும் உனக்கு நன்றி செலுத்துவதற்கும் உனது வணக்கத்தை அழகிய முறையில் நிறைவேற்றுவதற்கும் எனக்கு உதவி செய்வாக'' என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلٰى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

துஆக்களையும் ஓதிக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு அடியேனின் பழக்கத்தில் இருந்து வரும் அமல்களில் சிலதைப் பற்றிய விளக்கத்தை கூறி வைத்தேன்.

அதனைக் கேட்டதும் அல்ஹம்துலில்லாஹ், நல்ல ஒரு பாடத்தை படித்துக் கொண்டேன். அல்லாஹ் உங்களுக்கு ரஹ்மத் செய்வானாக! என்று எனக்காக துஆச் செய்ததன் பின்,

இன்னொரு விடயத்தைப் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறி,

வெள்ளிக்கிழமை சுபஹுத் தொழுகையின்போது இரண்டாவது ரக்கத்தில் சூரத்துல் பாத்திஹாவுக்குப் பிறகு ஓதப்படும் நீண்ட சூராவின் இறுதியின் போது இரண்டு இடங்களில் இமாம் சிறிது நேரம் ஓதுவதை நிறுத்துவதையும் அந்த சமயத்தில் மஃமூம்கள் ஏதோ ஓதிக் கொள்வதையும் அவதானிக்க முடிகிறது. அதைப் பற்றி என்ன சொல்லப் போகிறீர்கள் என்று கேட்டார்.

இருபத்தி ஒன்பதாவது ஜுஸ்வில் இடம் பெற்றிருக்கும் சூரா தஹ்ர் என்பதுவே நீங்கள் சொல்லக்கூடிய அந்த சூராவாகும்.

வெள்ளிக்கிழமை சுபஹுத் தொழுகையின் போது முதல் ரக்கஅத்தில் சூரா அலீப் லாம் ஸஜதாவையும்,

இரண்டாவது ரக்கஅத்தில் சூரா தஹ்ரையும் ஓதுவது சுன்னத்தாகும். அதனால்தான் ஷாபி மத்ஹபில் அதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு பழக்கத்தில் பேணப்பட்டு வருகின்றது.

தஹ்ர் என்ற இந்த சூராவின் இறுதி வசனத்தில் அல்லாஹ்வின் ரஹ்மத் என்ற அருளைப் பற்றியும், அதாபைப் பற்றியும் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. இந்த இடங்களிலேதான் இமாமவர்கள் ஓதுவதை சற்று நேரம் நிறுத்தி விட்டு மீண்டும் தொடர்கிறார். இந்த இடைப்பட்ட நேரத்தில் ஒரு விடயம் ஓதப்பட வேண்டும். அதாவது,

அவன் விரும்பியவனைத் தன்னுடைய அருளில் புகுத்தி விடுகின்றான் என்ற பொருள் கொண்ட

يُدْخِلُ مَنْ يَّشَآءُ فِيْ رَحْمَتِهٖ

என்பதை ஓதும்போது ''யா அல்லாஹ்! உன் ரஹ்மத்தில் என்னை நுழைய வைப்பாயாக!'' என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ مِنْ رَحْمَتِكَ என்பதையும்

''அக்கிரமக்காரர்களுக்குத் துன்புறுத்தும் வேதனை யைத்தான் சித்தப்படுத்தி வைத்திருக்கிறான்'' என்ற பொருள் கொண்ட

وَالظّٰلِمِيْنَ اَعَدَّ لَهُمْ عَذَابًا اَلِيْمًا என்பதை ஓதும்போது,

''யா அல்லாஹ்! உனது நோவினை தரும் வேதனையை விட்டு என்னை பாதுகாப்பாயாக!'' என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ اَعِذْنِيْ مِنْ عَذَابٍ اَلِيْمٍ

என்பதையும் சொல்லிக் கொள்ள வேண்டும்.

இந்த சூராவை ஓதும் போது மாத்திரமல்லாது இன்னும் சில சூராக்கள் இருக்கின்றன. அவைகளிலும் எந்தெந்த இடங்களில் அல்லாஹ்வின் ரஹ்மத்தைப் பற்றியும், அதாபைப் பற்றியுமுள்ள வசனங்கள் மொழியப்படுகின் றதோ அதனை ஓதுபவரும் செவிமடுப்போரும் அந்த சந்தர்ப்பத்தில் அதற்கேற்றவாறு அல்லாஹ்விடம் விண்ணப் பித்துக் கொள்ள வேண்டும். இதைப் பற்றிய விளக்கங் களை ஆலிம் உலமாக்களை அணுகி தெரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும் என்று விளக்கம் கூறிய போது அதன் மூலம் அவருடன் கூடியிருந்தவர்களுக்கும் புதிய ஒரு பாடத்தை படித்துக் கொள்ளும் பாக்கியம் கிடைக்கலா யிற்று.

மற்றொரு தடவை

ஒரு விஷயம் விளங்கிக் கொள்ள வேண்டும். கேட்க முடியுமா என்று பக்கத்தில் வந்து நின்றார்.

ஏன் முடியாது. படித்துக் கொள்வதற்காகத்தானே வந்திருக்கிறோம். தைரியமாக கேளுங்கள், தெரிந்தால் சொல்கிறேன். தெரியாவிட்டால் நாம் இரண்டு பேரும் சேர்ந்து தெரிந்தவர்கள் யாரையாவது தேடிப் போவோம் என்றேன்.

நான் செய்து வரக்கூடிய விஷயம்தான். ஆனால், முக்கியத்துவம் கொடுத்து வழமையாக செய்து வரக்கூடிய விடயமல்ல. சில சந்தர்ப்பங்களில் செய்வேன். சில நேரங்களில் செய்வதில்லை. அதனை சரியாக செய்கி றேனா இல்லையா என்பதையும் என்னால் சரியாக சொல்ல முடியாது. அதனால்தான் கேட்கிறேன் என்று சிறிய ஒரு பீடிகையுடன் ஆரம்பித்த அவர், உளூவுடைய விஷயத்தைப் பற்றித்தான் விளங்கிக் கொள்ள வேண்டும் என்று கூறி,

உளுசெய்தபின் ஓதுவதற்கு துஆ ஏதும் இருக்கிறதா? அவசியம் ஓதித்தான் ஆக வேண்டுமா? அதற்கு ஏதாவது ஆதாரம் இருக்கிறதா? இதுதான் என்னுடைய கேள்வி என்று கேட்டு நின்றார்.

அப்போது ஜமாஅத்தில் வந்திருந்தவர்களில் சிலர் அவரைப் பற்றி ஓரளவு விளங்கிக் கொண்டிருந்ததாலும், வெகு நேரம் என்னுடன் பேசிக் கொண்டிருந்ததை பார்த்துக் கொண்டிருந்ததாலும் அவர்களுக்கு ஏதாவது பிரயோஜனம் கிடைக்கலாம் என்று நினைத்தவர்களாய் நாங்கள் இருவரும் இருந்து கொண்டிருந்த இடத்திற்கருகாமைக்கு வந்து அனுமதி கேட்டு அமரலாயினர்.

நான் சொன்னேன்.

அல்ஹம்துலில்லாஹ், நல்ல விடயத்தைப் பற்றித்தான் கேட்கிறீர்கள். அவசியம் நாம் ஒவ்வொருவரும் இதைப் பற்றி விளங்கித்தான் ஆக வேண்டும். அது மாத்திரமல்ல, ஒவ்வொரு விடயத்தையும் விளங்கித்தான் நாம் அமல் செய்யக் கூடியவர்களாய் இருக்க வேண்டும் என்று கூறி விட்டு,

உளுவுடைய விடயத்தைப் பற்றி பொதுவாக நாம் அனைவரும் தெரிந்துதான் வைத்திருக்கிறோம்.

உளு இல்லா விட்டால் தொழுகை இல்லை. உளு வின் பர்ள்கள் ஆறு. அதாவது,

1. உளுவின் பர்ளுகளை இறுக்கிறேன் (நிறைவேற்று கிறேன்) என்று மனதால் நினைத்தல்.
2. அந்த நிய்யத்துடன் முகம் முழுவதையும் கழுவுதல்.
3. இரு கைகளையும் முழங்கை முட்டு உட்பட கழுவுதல்.
4. தலையில் சிறிது பாகத்தை தண்ணீர் கொண்டு தடவுதல்.

5. இரு பாதங்களையும் கரண்டை கணுக்காலுடன் கழுவுதல்.
6. மேற்குறிப்பிட்ட பிரகாரம் ஒன்றன்பின் ஒன்றாக வரிசைக் கிரமமாக செய்தல்.

அத்துடன் பல சுன்னத்துகளும் இருக்கின்றன. அவைகளுள் பிஸ்மில்லாஹில் அளீம் அல்ஹம்துலில்லாஹி அலா தீனுல் இஸ்லாம் என்று ஆரம்பமாக சொல்லிக் கொள்ளுதல்.

கிப்லாவை முன்னோக்கி இருத்தல்

இரு கைகளையும் மணிக்கட்டுவரை கழுவுதல்

வாய் கொப்பளித்தல்

நாசிக்கு தண்ணீர் செலுத்துதல்

மிஸ்வாக் செய்து பல் துலக்குதல்

அடர்ந்த தாடியை குடைந்து கழுவுதல்

இரு காதுகளையும் மஸ்ஹு செய்தல்

இரு கால் விரல்களையும் குடைந்து கழுவுதல்

உறுப்புக்களில் வலது பக்கங்களை முற்படுத்துதல்

ஒவ்வொரு உறுப்பையும் மும்மூன்று விடுத்தம் கழுவுதல்

வேறு பேச்சுக்கள் எதுவும் பேசாதிருத்தல்

உளு செய்து முடிந்ததும் ஷஹாதத் கலிமாவும் உளுவுடைய துஆவையும் ஓதுதல்

போன்றவை முக்கியமானவைகளுள் உள்ளதாகும்.

நீங்கள் கேட்கின்ற துஆவுடைய விஷயத்தைப் பற்றி சொல்வதென்றால், அதைப் பற்றியும் நபிமொழிகளில் சில விளக்கங்கள் சொல்லி வைக்கப்பட்டிருக்கின்றன. இது அடியேன் ஏற்கனவே படித்து வைத்திருக்கும் ஒரு பாடமாகும்.

கொஞ்சம் பொறுத்திருங்கள். அதைப் பற்றிய ஒரு குறிப்பு என்னிடத்தில் இருக்கிறது. அதைப் பார்த்தால் தெளிவாக இந்த விடயம் சம்பந்தமாக விளக்கம் சொல்ல உதவியாக இருக்கும் என்று கூறிவிட்டு எழுந்து சென்று எனது பையிலிருந்து முக்கியமான விடயங்களை பதிவு செய்து வைத்திருக்கும் அடியேனின் ஒரு குறிப்புப் புத்தகத்தை எடுத்து திரும்பி வந்து அவர்களுக்கருகில் அமர்ந்தேன்.

ஹஸரத் உமர் (ரலி) மூலமாக புகாரி ஷரீப் மற்றும் திர்மதி கிரந்தத்தில் பின்வருமாறு ஒரு கருத்து சொல்லி வைக்கப்பட்டிருக்கிறது. அதாவது, எவரொருவர் உளூவை முறைப் பிரகாரம் செய்ததன் பிறகு

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ
اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ
لَهٗ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ
اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ
مِنَ الْمُتَطَهِّرِيْنَ - وَاجْعَلْنِيْ مِنْ عِبَادِكَ
الصَّالِحِيْنَ -

என்ற துஅவை ஓதும் பழக்கத்தை கொண்டவராக இருந்து வருவாரோ அவருக்கு சுவர்க்கத்தின் எட்டு வாயில்களும் திறக்கப்பட்டுவிடும். அன்னவர் அவற்றில் தனக்கு விருப்பமான எந்த வாயிலூடாகவும் அதனுள் நுழைந்து கொள்ள முடியும் என்ற நன்மாராயமே அந்த விளக்கமாகும்.

இந்த துஆவின் கருத்தாவது :

யா அல்லாஹ்! நீ மிகத் தூய்மையானவன். உனது புகழைக் கொண்டே உன்னை புகழ்கிறேன்.

அல்லாஹ்வை தவிர்த்து வணக்கத்திற்குரியவன் வேறு எவருமே இல்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை எவருமில்லையென்றும், முஹம்மது (ஸல்) அவர்கள் அவனுடைய அடியாரும் தூதருமாய் இருக்கின்றார் களென்றும் நான் சாட்சியம் கூறுகின்றேன்.

யா அல்லாஹ்! பாவமன்னிப்பு கோருபவர்களில் என்னையும் சேர்த்து வைப்பாயாக!

பரிசுத்தமாக்கிக் கொள்கிறவர்களுடனேயும் என்னைச் சேர்த்தருள்வாயாக!

உனது நல்லடியார்களான சான்றோர்களில் ஒருவனாக வும் என்னை ஆக்கி வைப்பாயாக!

மூன்றாம் நாள் காலை நிகழ்ச்சி முடிவுக்கு வந்ததும் பக்கத்தில் வந்து நின்று அமீர் சாஹிப்! ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்று சிரித்துக் கொண்டு தயங்கிய நிலையில் என்னை நோக்கலானார்.

சொல்லுங்கள் என்றதும்,

உங்களை ஐந்தாறு தடவைகள் கவனித்து விட்டேன். நீங்கள் உளுச் செய்தவுடன் உடனே பள்ளிக்குள் நுழைந்து தொழுகிறீர்கள். அதற்கு நீங்கள் காட்டும் அவசரத்தை பார்க்கும்போது அது விஷேசமான ஒரு தொழுகையாக இருக்க வேண்டும் என்றே நினைக்க வேண்டி இருக்கிறது. அதைப் பற்றி கொஞ்சம் சொல்ல முடியுமா என்று கேட்டார்.

அது உளுவுடைய காணிக்கையாக தொழப்படும் இரண்டு ரக்கஅத் தொழுகையாகும். எந்நேரமும் தம்மை தூய்மையாக வைத்துக் கொள்ள உதவியாக அமைந் திருக்கும் சிறப்பிற்குரிய அந்தத் தொழுகை நமது நாயகம்

(ஸல்) அவர்கள் நமக்காக காட்டித் தந்திருக்கும் மேலான சுன்னத்தான ஒரு அமலாகும். அதாவது உளூச் செய்து கொண்டதும்

''உஸல்லீ ஸலாத்தல் உளூயி ரக்அத்தைனி லில் லாஹி தஆலா அல்லாஹு அக்பர்''

''உளூவின் சுன்னத்தான தொழுகையை நிறைவேற்று கின்றேன்'' என்ற நிய்யத்துடன் இரண்டு ரக்அத்துகள் தொழுதல்.

முதல் ரக்அத்தில் சூரா பாத்திஹாவுக்குப் பின்,

وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَّلَمُوْٓا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ
وَاسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا ۝٦٤

என்ற வசனத்தை ஓதி ''அஸ்தஃஃபிருல்லாஹ்'' என மூன்று முறை கூறி, குல் யா அய்யுஹல் காபிரூன்'' சூராவை ஓதுவதும்

இரண்டாவது ரக்அத்தில்,

وَمَنْ يَّعْمَلْ سُوْٓءًا اَوْ يَظْلِمْ نَفْسَهٗ ثُمَّ يَسْتَغْفِرِ
اللّٰهَ يَجِدِ اللّٰهَ غَفُوْرًا رَّحِيْمًا ۝١١٠

என்ற வசனத்தை ஓதி ''அஸ்தஃஃபிருல்லாஹ்'' என மூன்று முறை கூறி ''குல்ஹுவல்லாஹு அஹத்'' சூராவை ஓதுவதும் சுன்னத்தாகும் என்று அவர் கேட்டு நின்ற கேள்விக்கு பதில் சொல்லும் வகையில் சில விளக்கங்களை சொல்லி முடித்ததும், இன்னொரு விடயம் என்றார்.

என்ன அது?

சுபஹ் தொழுகையின் போது உங்களைப் பார்க்கிறேன். பாங்கு சொல்லி முடிந்த உடனேயே அவசரமாக எழுந்து அவசர அவசரமாக இரண்டு ரக்கஅத் தொழுகிறீர்கள். அது சுபுஹுடைய சுன்னத் தொழுகை என்பது எனக்குத் தெரிகிறது. ஆனால் அவசரப்படுவதில் ஏதாவது இரகசியம் இருக்கிறதா என்பதைப் பற்றியே நான் விளங்கிக் கொள்ள விரும்புகிறேன் என்றார்.

ஆம். அது சுபுஹுடைய சுன்னத் தொழுகையேதான். சுபஹுடைய சுன்னத் தொழுகையை தொழுவதில் சில சுன்னத்துகள் இருக்கின்றன.

அதில் ஒன்று அவசரமாக தொழுது முடிப்பதாகும். அடுத்தது -

பாங்கு சப்தத்தை செவிமடுத்ததும் தாமதியாது உடனேயே தொழுவது. அதனை வீட்டில் தொழுவது சிறந்தது.

மற்றது அந்தத் தொழுகையில் முதல் ரக்கஅத்தில் சூரத்துல் பாத்திஹாவுக்குப்பின் குல்யாஅய்யுஹல் காபிரூனும், இரண்டாவது ரக்கஅத்தில் சூரா பாத்திஹாவுக்குப் பின் குல்ஹுவல்லாஹு அஹது ஓதுவது ஆகியவையாகும் என்று விளக்கம் கூறியபோது அதுவும் ஒரு பாடமாக அமையலாயிற்று.

அவர் கேட்டு விளங்கிக் கொண்டதில் கீழ்காணும் விடயமும் ஒன்றாக இருந்தது. அதாவது,

வீட்டிலிருந்து வெளியேறும்போது ''பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹ்'' என்ற துஆ ஓதப்பட வேண்டும் என்பதை அறிவேன். வீட்டிற்குள் நுழையும்போது துஆ

எதுவும் இருக்கிறதா என்பதுதான் எனது கேள்வி என்று கேட்டு நின்றார்.

ஏனில்லை. அதற்கும் துஆ இருக்கத்தான் செய்கிறது எனக் கூறி, கீழ்காணும் துஆவை சொல்லிக் காட்டினோம்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْئَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ الْمَخْرَجِ
بِسْمِ اللّٰهِ وَلَجْنَا وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا

யாஅல்லாஹ்! நல்ல நுழையுதலையும், இன்னும் நல்ல வெளியேறுதலையும் நிச்சயம் நான் உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு வெளியேறினோம். இன்னும் எங்களின் இரட்சகனான அல்லாஹ் வின் மீதே பரஞ்சாட்டினோம்.

அதுவும் அவருக்கு மாத்திரமல்லாது பக்கத்தில் இருந்த வேறு சிலருக்கும் ஒரு பாடமாக அமையலாயிற்று.

அடியேனுடன் சேர்ந்து வந்திருந்த அந்த மூன்று நாட்களுக்குள் இவ்வாறு கேட்டுக் கேட்டு நடமாடும் இந்த மதரஸாவின் மூலம் அவர் பல பாடங்களை படித்துக் கொள்ளும் பாக்கியத்தை பெற்றுக் கொள்ளலானார்.

அத்துடன் வீட்டை விட்டு வெளியேறுகையில் ''பிஸ்மில்லாஹி தவக்கல்து அலல்லாஹ்'' என்பதுடன் ''வலா ஹௌல வலா குவ்வத்த இல்லாபில்லாஹ்'' என்பதையும் சேர்த்து ஓதிக் கொள்வது சிறப்பிற்குரியதாகும் என்பதையும் இந்த இடத்தில் சொல்லி வைக்க விரும்புகிறேன்.

அடியேனும் நடமாடும் இந்த மதரஸாவிலேயே இவ்வாறான பாடங்களை படித்துக் கொள்ளும் வாய்ப்பினை பெற்றுக் கொண்டவன் என்பதும் குறிப்பிடப்பட வேண்டிய ஒரு செய்தியாகும்.

# 10. மர்ஹூம் மௌலவி சர்தார் கான் வாயிலாக படித்த பாடங்கள்

2004-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் பத்தாம் திகதி தனது உலக வாழ்வை நிறைவு செய்து கொண்டு மறுமையின் பயணத்தை ஆரம்பித்த மர்ஹூம் மௌலவி அல்ஹாஜ் சர்தார் கான் அவர்கள் அடியேனுடைய நீண்டகால நண்பராக விளங்கியவர். அன்னார் அடியேனுடன் மூன்று தடவைகள் ஹஜ் பிரயாணத்திலும், மூன்று தடவைகள் இந்தியாவின் தமிழ்நாடு, டெல்லி மற்றும் பங்களாதேஷில் சில்லா வக்திலும், பல தடவைகள் மூன்று நாள் ஜமாஅத்து களிலும் சேர்ந்து வந்திருந்த காலங்களில் பல பிரயோஜனங் களை கண்டு கொள்ள முடிந்ததை அடியேனால் என்றுமே மறந்து விட முடியாது.

அல்லாஹ்வின் பாதையில் தீனுடைய உழைப்பிற்காக அடியேனுடன் சேர்ந்து வந்திருந்த சந்தர்ப்பங்களில் அவரைக் கொண்டு ஜமாஅத்தில் வந்திருந்தவர்கள் ஒவ்வொரு தடவையும் ஏதாவது ஒரு பாடத்தையாவது படித்துக் கொள்ளும் வாய்ப்புக்களை பெற்றுக் கொண்ட தைப் பற்றிய சில விபரங்களை இங்கு இடம் பெற வைப்பதில் வாசகர்களால் நன்மையை கண்டு கொள்ள முடியுமென்று நம்புவதால் அடியேனின் நினைவில் நிற்கக் கூடிய அவ்வாறான நிகழ்வுகளில் நான்கை இந்த பாடத்தில் இடம் பெறச் செய்திருக்கிறேன்.

ஒரு தடவை கொழும்பிலிருந்து எஹலியகொட என்ற ஊருக்கு மூன்று நாட்களுக்காக சென்றிருந்தோம். இரண்டாம் நாள் தஃலீம் நிகழ்ச்சியை அவர் பொறுப்பாக இருந்து நடாத்திக் கொண்டிருந்த போது இடையில் பிக்ஹூ எனும் மார்க்க சட்டம் சம்பந்தமான சில குறிப்புக்களை

விளக்கிக் கூறலானார். குறிப்பாக பர்ளான குளிப்பு சம்பந்த மான விளக்கத்தை முழுக்கின் பர்ளான குளிப்பை நிறைவேற்றுகிறேன் என்று நினைப்பதும் உடம்பு பூராவை யும் தண்ணீர் கொண்டு நனைப்பதும் என்கின்ற குளிப்பின் இரண்டு பர்ளுகளுடன் அதை செயல் படுத்துகின்ற முறையையும் மிகவும் தெளிவாக விளக்கிக் காட்டினார்.

தஃலீம் நிகழ்ச்சி நிறைவு பெற்ற போது நேரம் பகல் பன்னீரெண்டு மணியாகிவிட்டது. ளுஹர் தொழுகைக்காக அதான் சொல்லப்பட இன்னும் இருபது நிமிடங்களே இருந்தன. தஃலீமுடைய அமல் நிறைவுக்கு வந்ததும் அவசர அவசரமாக மஜ்லிஸை விட்டு எழுந்து ஜமாஅத் தினர்களின் பொதிகள் வைக்கப்ட்டிருந்த இடத்தை நோக்கிச் சென்ற ஜமாஅத்தில் முதல் தடவையாக வந்திருந்த ஒரு சகோதரர் துவாயையும் லுங்கி ஒன்றையும் எடுத்துக் கொண்டு மஸ்ஜிதை விட்டு வெளியேற முற்பட்ட போது அவருடைய பெயரைச் சொல்லி அழைத்து அதான் சொல்ல கொஞ்ச நேரம் தான் இருக்கின்ற இந்த சமயத்தில் எங்கே போகிறீர்கள் என்று கேட்டேன்.

அதற்கு அவர் மன்னித்துக் கொள்ளுங்கள் அமீர் சாஹிப், என் வாழ்க்கையில் இன்றைக்குத்தான் அசலான முறையில் குளிக்கப் போகிறேன், சீக்கிரமாக வந்து விடு கிறேன், பிறகு விபரத்தை சொல்கிறேன் என்று சுருக்கமாக கூறி அனுமதி கேட்டு நின்றார். விஷயத்தை விளங்கிக் கொண்டதும் போய்விட்டு வாங்க என்று அனுப்பி வைத் தேன். அவரது விடயம் இதுதான்.

அவருக்கு வயது முப்பத்தி நான்கு, நான்கு பிள்ளை களுக்கு தந்தை. முழுக்கென்றால் என்ன, அதிலிருந்து துப்பறவாகுவது எப்படி என்ற எந்த விபரமும் அது நாள் வரை அவர் அறிந்த ஒரு விடயமாக இருக்கவில்லை.

நடமாடும் இந்த மதரஸாவின் மூலம் அன்று தான் அதைப்பற்றிய விளக்கம் அவருக்கு கிடைத்திருக்கிறது.

அவருடைய நிலையை நினைத்து அவர் அடைந்த கைசேதமோ அளவு சொல்ல முடியாத அளவுக்கு காணப்பட்டதை அடியேனால் நன்றாக அவதானிக்க முடிந்தது.

இது சம்பந்தமான சம்பவங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. திருமணமாகி பிள்ளை குட்டிகளை மாத்திரமல்லாமல், பேரன் பேத்திகளைக் கண்டவர்களிடம் கூட இந்த விஷயத்தைப் பற்றிய விளக்கமில்லாத எத்தனையோ அனுதாபத்திற்குரியவர்களை இன்றும் கூட கண்டு கொண்டு தான் இருக்கிறோம். அத்தனை பேர்களுடைய பாரதூரமான அந்த குறைபாடு நீங்கி அவர்கள் மனம் பெற நடமாடும் இந்த மதரஸாதான் வரப்பிரசாதமாக விளங்கி நிற்கின்றதென்றால் அது மிகையான ஒரு விமர்சனமல்ல.

அடுத்து, இடம் பொருள் ஏவல் எதையும் கவனியாது தெரியாத விடயங்களைப் பற்றிய விபரங்களை நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் சிறிதும் கூச்சப்படாமல் கேட்டுத் தெரிந்து கொள்வதில் பெரிதும் ஆர்வம் காட்டக்கூடியவராய் நடந்து கொண்ட இருபத்தைந்து வயது கொண்ட ஒரு வாலிபர் வாயிலாக தெளிவுக்கு வந்த சின்னதொரு பாடம் சம்பந்தமாக அமைந்த ஒரு விடயம் இடம் பெறுகிறது.

பல வருடங்களுக்கு முன்னால் குருநாகல் டவுன் பள்ளிவாயலுக்கு சென்றிருந்த மூன்று நாள் ஜமாஅத்தில் அவ்வாலிபர் முதல் தடவையாக வந்திருந்தார்.

முதல் நாள், வெள்ளிக்கிழமை , இஷாவுடைய நேரம்.

அந்த வாலிபரும் ஜமாஅத்தில் வந்திருந்தவர்களில் சிலரும் ஊர் மக்களுடன் சேர்ந்து கதைத்துக்கொண்டிருந்த போது பள்ளியின் முஅத்தின் அதான் சொல்ல ஆரம்பித்தார். கதைத்துக் கொண்டிருந்தவர்கள் பேச்சை நிறுத்தாது தொடர்ந்தும் கதைத்துக் கொண்டே யிருந்தனர். அதனை கண்ணுற்ற மௌலவி சர்தார் கான் அவர்கள் தனது கைவிரலொன்றை வாயில் வைத்து பேச வேண்டாம் என்று சைக்கினை செய்தார். பேச்சுக்கள் நிற்பாட்டப்பட்டன.

ஆனால் அதான் முடிந்ததும் ஜமாஅத்தில் முதல் தடவையாக வந்திருந்த அந்த வாலிபர் மௌலவி அவர்களை நெருங்கி,

மௌலானா, நாங்கள் துன்யாவுடைய பேச்சை பேச வில்லையே, தீன் சம்பந்தமாக நல்ல பேச்சைத்தானே பேசிக் கொண்டிருந்தோம், ஏன் பேச வேண்டாம் என்று சொன்னீர்கள் என்று கேட்டார்.

அதற்கு அவர், துன்யாவுடைய பேச்சை பள்ளியினுள் பேசினீர்களென்றால் என்பது வருடத்துடைய அமல்களின் நன்மைகள் அழிக்கப்பட்டு விடும். அது ரொம்பவும் பயங்கரமானதும் கைசேதத்திற்குரியதுமான விடயம். எனினும் அதான் சொல்லும் பொழுது எந்த விதமான பேச்சுக்களையும் பேசுவது ஷரீயத்தில் தடுக்கப்பட்ட ஒரு செயலாகும் என்று விளக்கம் கூறியதுடன், மாறாக அதான் சொல்லப்படும் பொழுது அதனை செவியுறுவோர் வாய் பேசாது காது தாழ்த்திக் கேட்பதும் மெதுவான தொணியில் அதற்கு பதில் சொல்லிக் கொள்வதும் சுன்னத்தான ஒரு செயலாகும் என்றும் எடுத்து சொல்லி விட்டு, அதன் விபரங்களை விளக்கமாக கூறத் தொடங்கியபோது,

மௌலானா, தயவு செய்து என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். நான் விதண்டாவாதம் பேசுகிறேன் என்றோ

என்னை ஒரு குழப்பக்காரன் என்றோ நினைக்க வேண்டாம், விளங்கிக் கொள்வதற்காகவே கேட்கிறேன் என்று கூறி விட்டு, அதான் கூறும் பொழுது பேசக்கூடாது என்பதற்கும் முஅத்தின் கூறுவது போன்று கேட்பவர்களும் அதே மாதிரி கூறிக் கொள்ள வேண்டுமென்பதற்கும் குர்ஆனில் அல்லது ஹதீஸில் ஏதாவது ஆதாரம் இருக்கிறதா என்று கேட்டு நின்றார்.

மௌலவி அவர்கள் கோபப்படவுமில்லை, நிதான மிழக்கவுமில்லை. அவ்வாலிபரைப் பற்றி தப்பாக எதுவும் நினைத்தவராகவும் காணப்படவில்லை. மாறாக அவரிடம் இயல்பாகவே குடிகொண்டிருந்த சுபாவத்தின் பிரகாரம் அமைதியாக சிரித்த முகத்துடன்,

ஆம், முஸ்லிம் என்ற கிரந்தத்தில் அதற்கு ஆதாரம் இருக்கிறது என்று சொன்னார். வாலிபர் ஏற்றுக் கொண்டார். அதானுக்கு பதில் சொல்வது மாத்திரமல்ல, முஅத்தின் அதான் கூறி முடிந்ததும் அதனை செவியுறுவோர் கீழ்வரும் துஆவை ஓதிக் கொள்ள வேண்டும் என்பதும் ஹதீஸில் வலியுறுத்தி சொல்லி வைக்கப்பட்டிருக்கிறது என்றும் சொல்லிக் காட்டினார்.

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّآمَّةِ وَالصَّلٰوةِ
الْقَآئِمَةِ اٰتِ سَيِّدَنَا مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ
وَالْفَضِيْلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَّحْمُوْدَنِ الَّذِيْ
وَعَدْتَّهٗ

இறைவா! பூர்த்தியான இப்புனித அழைப்பிற்கும் நிலையான தொழுகைக்கும் உரியவனாகிய இரட்சகனே! எங்கள் தலைவர் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு வஸிலாவை யும் மகத்துவத்தையும் நீ வாக்களித்த மேலான பதவியை யும் தந்தருள்யாக என்பது இந்த துஆவின் பொருளாகும்.

இவ்வாறு இந்த துஆவை ஓதிக் கொண்டால் மறுமை நாளில் அவருக்காக எனது சிபாரிஷ் கடமையாகி விடுகின்றது என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளதாக புகாரியில் ஒரு நபிமொழியும் காணப்படுகின்றது என்ற ஒரு விடயத்தையும் சொல்லிய போது அதானையும் அதற்கு பதில் கூறல், துஆ போன்றவற்றைப் பற்றியும் ஹதீஸில் இந்தளவு சொல்லப்பட்டிருக்கும் விபரத்தை அன்று தான் அந்த வாலிபரின் காரணத்தினால் நடமாடும் இந்த மதரஸாவின் மூலம் ஜமாஅத்தில் வந்திருந்த பலருக்கு மாத்திரமல்லாது அடியேனாலும் விளங்கிக் கொள்ள முடிந்தது.

ஒரு தடவை இருபது நபர்கள் அடங்கிய சில்லா ஜமாஅத்துடன் இலங்கையின் தென்மாகாணத்தைச் சேர்ந்த வெலிகம வெலிப்பிட்டிய என்ற கிராமத்தில் தங்கியிருந்த போது ஜனாஸா தொழுகைக்காக ஒரு மைய்யத்தை ஊர் மக்கள் மஸ்ஜிதுக்கு கொண்டு வந்தனர்.

அந்த சமயத்தில் ஊர் வந்திருந்த மர்ஹூம் மௌலவி சர்தார் கான் பள்ளியில் எம்முடனேயே இருந்தார்கள். (அது தான் அவருடைய ஊராகும்)

ஜனாஸாவைப் பற்றிய செய்தியை அறிந்ததும் பள்ளிக்கு ஜனாஸா வர இன்னும் ஒரு மணித்தியாலம் இருந்த வேளையில் ஜமாஅத்தார்களுக்கு ஜனாஸா தொழுகையைப் பற்றிய விபரங்களை சொல்லித் தரும்படி மௌலவியை வேண்டிக் கொண்டதும் சம்மதித்து அவர்கள் விளக்கத் தொடங்கினார்கள்.

ஜமாஅத்தில் எம்முடன் வந்திருந்தவர்களுள் அதிகமானோர் புதியவர்களாக இருந்ததாலும் தொழுகை விடயங்களில் விபரம் தெரிந்தவர்கள் குறைந்தவர்களாக இருந்ததாலுமே அவ்வாறான தேவைக்கு ஆளானோம்.

வந்திருந்தவர்களில் பாதிக்கும் கூடுதலானோர் இது வரை ஒரு தடவையேனும் ஜனாஸா தொழுகையை தொழுததேயில்லை என்ற ஒரு செய்தியையும் அவர்களுள் ஒருவர் தொழத் தெரியாததன் காரணத்தால் தனது தாயுடைய ஜனாஸா தொழுகையில் கூட கலந்து கொள்ள வில்லை என்று கண்ணீர் மழ்க கவலையுடன் கூறிய செய்தியையும் தெரிந்து கொண்ட பிறகே இப்படியான ஒரு ஏற்பாட்டை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

ஜனாஸா தொழுகையின் பர்ளுகள் ஏழு

1. பர்ளான ஜனாஸா தொழுகை தொழுகிறேன் என்று நிய்யத் வைப்பது.
2. நின்று தொழுவது. இயலாவிட்டால் இருந்து தொழலாம்.
3. தக்பீர் தஹ்ரீமாவைச் சேர்த்து நான்கு தக்பீர் சொல்லித் தொழுவது.

(ஒவ்வொரு தக்பீரின் போதும் அல்லாஹு அக்பர் எனக் கூறி இரு கைகளையும் காதுவரை உயர்த்தி கீழே விட்டு விடாதவாறு கட்டிக் கொள்வது சுன்னத்தாகும்.)

4. முதல் தக்பீர் கட்டியவுடன் சூரத்துல் ஃபாத்திஹா ஓதுவது.
5. இரண்டாவது தக்பீர் கட்டியவுடன் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்லுதல். (அத்தஹிய்யாத்தில் ஓதக் கூடிய ஸலவாத்து ஏற்றமானது)
6. மூன்றாவது தக்பீர் கட்டியவுடன் மையத்திற்காக துஆ செய்வது. குறைந்த அளவு

அல்லாஹும்மஃபிர் லஹு வர்ஹம்ஹு

என்று ஓதிக் கொள்வது.

அன்றைய ஜனாஸா ஒரு ஆண் மைய்யத். பெண் மைய்யத்தாக இருந்தால் அல்லாஹும்மஃபிர் லஹா வர்ஹம்ஹா என்று ஓதிக் கொள்ள வேண்டும்.

மைய்யத்திற்காக கீழ்காணும் முறைப் பிரகாரம் நீண்ட துஆ ஓதுவது சுன்னத்தாகும்.

اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَشَاهِدِنَا وَغَآئِبِنَا
وَصَغِيْرِنَا وَكَبِيْرِنَا وَذَكَرِنَا وَاُنْثَانَا اَللّٰهُمَّ مَنْ
اَحْيَيْتَهٗ مِنَّا فَاَحْيِهٖ عَلَى الْاِسْلَامِ وَمَنْ
تَوَفَّيْتَهٗ مِنَّا فَتَوَفَّهٗ عَلَى الْاِيْمَانِ۔

யா அல்லாஹ்! எங்களின் உயிருடன் இருப்பவர்கள் இறந்துவிட்டவர்கள் எங்கள் முன்னிலையிலிருப்பவர்கள் எங்களைவிட்டு மறைந்திருப்பவர்கள் எங்களில் சிறியவர்கள் பெரியவர்கள் எங்களில் ஆண்கள் பெண்கள் ஆகியோருக்கு உனது மன்னிப்பை அருள்வாயாக! யா அல்லாஹ்! எங்களில் எவரை நீ வாழச் செய்திருக்கிறாயோ அவரை இஸ்லாத்தின்படி வாழச் செய்வாயாக! எங்களில் எவரை நீ மரணமடையச் செய்கிறாயோ அவரை ஈமானுடன் மரணிக்கச் செய்வாயாக!

நான்காவது தக்பீர் கட்டி ஸலாம் கொடுப்பது. அதில்

اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا اَجْرَهٗ وَلَا تَفْتِنَّا بَعْدَهٗ وَاغْفِرْ لَنَا وَلَهٗ

இறைவா! இவர் (இறந்தவர்) அடையும் கூலியில் எங்களை விட்டும் தடுத்து விடாதே! அவருக்குப் பின் எங்களை சோதனையிலாக்கி விடாதே! இவருக்கும் எங்களுக்கும் பாவங்களை மன்னிப்பாயாக! என்று ஓதுவது சுன்னத்தாகும்.

இவ்வாறு தெளிவாக விளக்கப்படுத்தியதுடன் மையத்தை கப்ரில் அடக்கம் செய்ததன் பின் கப்ரின் அருகில் நிற்பவர்கள் மூன்று பிடி மண் எடுத்து கப்ரில் போடுவது சுன்னத்தான ஒரு செயல் என்று கூறி, மண்ணைப் போடும் போது,

مِنْهَا خَلَقْنٰكُمْ (பூமியாகிய) அதிலிருந்தே நாம் உங்களைப் படைத்தோம்.

وَفِيْهَا نُعِيْدُكُمْ பின்னர் அதிலேயே நாம் உங்களை மீள வைப்போம்.

وَمِنْهَا نُخْرِجُكُمْ تَارَةً اُخْرٰى ۝ மற்றொரு தடவையும் (உங்களுக்கு உயிர் கொடுத்து) அதிலிருந்தே நாம் உங்களை வெளிப்படுத்துவோம்.

என்றும் ஓதிக் கொள்ள வேண்டும் எனவும் சொல்லித் தந்தார்கள்.

ஒரு தடவை சிலாபம் நகருக்கருகாமையில் அமைந் திருக்கும் சவரானை என்ற ஊருக்கு சென்றிருந்தோம்.

பதினான்கு நபர்களைக் கொண்ட எங்கள் ஜமாஅத்தில் மூவரைத் தவிர ஏனையோர் அனைவரும் திருமணம் செய்து குடும்பஸ்தர்களாக வாழ்ந்து வருபவர்கள்.

முதல் நாள் தஃலிம் நிகழ்ச்சியின் போது இடம் பெற்ற குர்ஆன் ஹல்காக்களில் கண்டு கொண்ட குறைபாடுகள் எமக்கு மிகப் பெரும் கவலையை ஏற்படுத்தலாயிற்று.

நான்கைந்து நபர்களைத் தவிர மிகுதியாயிருந்தவர் களில் எவரும் சூரத்துல் பாத்திஹாவைக் கூட சரியாக ஓதக் கூடியவர்களாக இருக்கவில்லை. எனவே அதில் கவனம் செலுத்த வேண்டிய தேவையே அதிகமாக இருந்தது. அந்த பொறுப்பை மௌலவி அவர்களிடமே ஒப்படைக்க வேண்டியதாயிற்று.

அவரும் அதனை நன்மையை அடைந்து கொள்ளக் கூடிய நல்லதொரு சந்தர்ப்பம் கிடைத்ததை எண்ணி மன மகிழ்வுடன் ஏற்று அனைவரும் சூரத்துல் பாத்திஹாவுடன் மேலும் நாலைந்து சிறிய சூராக்களையும் திருப்தி படும் வகையில் மிகவும் திருத்தமாக ஓதுவதில் முன்னேற்றத்தை கண்டு கொள்ளும் வரை மூன்று நாட்களும் அவர்கள் மீது அயராது முயற்சி செய்யக் கூடியவராக இருந்த நிகழ்வு அடியேனின் நெஞ்சை விட்டு என்றுமே நீங்காத ஒரு நிகழ்வாக அமைந்து விட்டதை குறிப்பிட்டு மர்ஹூம் மௌலவி சர்தார் கான் சம்பந்தப்பட்ட விடயங்களை இத்துடன் நிறைவு செய்து கொள்கிறேன்.

அல்லாஹ் அவர்களுடைய பாவங்கள் தப்புத்தவறுகள் அனைத்தையும் மன்னித்து பிழை பொறுத்து பாக்கியம் பெற்ற நல்லோர்கள் கண்டு கொண்ட தங்குமிடத்தில் சேர்த்தருள்வானாக.

**ஸையிதுல் இஸ்திஃபார்**

اَللّٰهُمَّ اَنْتَ رَبِّيْ لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ خَلَقْتَنِيْ
وَاَنَا عَبْدُكَ وَاَنَا عَلٰى عَهْدِكَ وَوَعْدِكَ
مَا اسْتَطَعْتُ اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ
اَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَاَبُوْءُ بِذَنْبِيْ
فَاغْفِرْ لِيْ فَاِنَّهٗ لَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّآ اَنْتَ

யா அல்லாஹ்! நீயே எங்கள் இரட்சகன். வணக்கத்திற்கு உரியவன் உன்னைத்தவிர வேறில்லை. நீயே என்னைப் படைத்தாய்! நான் உனது அடிமையாக இருக்கிறேன். நான் உனது உடன்படிக்கையிலும், வாக்குறுதியிலும் என்னால் இயன்ற அளவு நிறைவேற்றுகிறேன். நான் செய்த தீங்குகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். எனக்குச் செய்த அருட்பாக்கியங்களை நான் ஏற்றுக் கொள்கிறேன். நான் பாவம் செய்ததையும் ஒப்புக்கொள்கிறேன். என்னை மன்னிப்பவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை.

# 11. சின்னஞ்சிறிய சம்பவங்கள்

சின்னச் சின்ன பாடங்களை சந்திக்கச் செய்த சம்பவங்கள் சிலதை நினைவு கூர்ந்து அவைகளை ஒன்று சேர்த்து இறுதி அத்தியாயமாக அமைத்து இச்சிறிய நூலை நிறைவு செய்து கொள்கின்றேன்

1988-ம் ஆண்டு இலங்கையிலிருந்து பீஜி தீவுக்கு ஈமானுடைய உழைப்பிற்காக அல்லாஹ்வின் பாதையில் செல்லும் வழியில் அவுஸ்திரேலியாவில் பத்து நாட்கள் வரை தங்க வேண்டியதாயிற்று.

அங்கு ஒரு நாள் சிட்னி என்ற நகரில் ஆஸ்பத்திரி ஒன்றுக்கு பீஜி நாட்டைச் சேர்ந்த நோயாளி ஒருவரை சந்திப்பதற்காக மர்ஹூம் ஹாஜி அப்துல் கரீம் பாயும், அடியேனும் வழிகாட்டியாக உள்ளூரைச் சேர்ந்த ஒரு சகோதரரும் சென்றிருந்தோம்.

நோய் விசாரித்து விட்டு திரும்பி வருகையில் நோயாளியைப் பார்த்து,

لَا بَأْسَ طَهُوْرٌ اِنْ شَاءَ اللّٰهُ لَا بَأْسَ طَهُوْرٌ
اِنْ شَاءَ اللّٰهُ اَللّٰهُمَّ اشْفِهِ اَللّٰهُمَّ عَافِهِ

என்ற துஆவை ஹாஜி கரீம் பாய் ஓதினார். அதனைக் கண்ணுற்ற வழிகாட்டியாக வந்திருந்த சகோதரர் ஆஸ்பத்திரியில் இருந்து வெளியே வந்ததும் கரீம் பாயை நோக்கி நோயாளியை பார்த்து ஏதோ ஓதினீர்களே அது என்ன? என்று கேட்க, அது நோயாளிக்காக அல்லாஹ்விடம் கேட்கப்பட வேண்டிய சுன்னத்தான ஒரு துஆவாகும் என்று கூறி அதன் அர்த்தத்தையும் எடுத்துச் சொன்னதும் அவருக்கு அது ஒரு பாடமாக அமையலாயிற்று.

''ஒன்றும் கவலைப்பட வேண்டியதில்லை. இன்ஷா அல்லாஹ் (இந்த நோய் உமது பாவத்தைப் போக்கி) பரிசுத்தமாக்கி விடும்''. ''யா அல்லாஹ்! இவரைக் குணப்படுத்தி பரிசுத்தப் படுத்தி விடு, நலமாக்கி விடு'' என்பதுவே மேல்குறிப்பிடப் பட்ட துஆவின் பொருளாகும்.

ஆறு நபர்களைக் கொண்ட ஜமாஅத் ஒன்றில் இணைந்திருந்த நாங்கள் டெல்லியிலிருந்து போபால் நோக்கி ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது ஹைதராபாத்தைச் சேர்ந்த மோஹன் என்ற பெயர் கொண்ட ஒரு வாலிப டாக்டருடன் சிநேகபூர்வமான முறையில் சம்பாசித்துக் கொண்டிருந்தோம்.

அந்த சந்தர்ப்பத்தின் போது எமது ஜமாஅத்தைச் சேர்ந்த சகோதரர் ஒருவர் தும்மலானார். அப்போது அவர் அல்ஹம்துலில்லாஹ் என்று கூற நாம் எல்லோரும் யர்ஹக்குமுல்லாஹ் என்று பதில் கூற அதற்கு பகரமாக தும்மியவர் எஹ்தீகுமுல்லாஹ் என்று கூறினார்.

ஒரு தும்மலுக்கு இவ்வளவு நடந்ததை கண்ணுற்றற டாக்டர் அதைப் பற்றி விசாரிக்கலானார்.

விளக்கத்தை எடுத்துச் சொன்னபோது வியப்புற்று அதனை தான் சம்பூரணமாக ஏற்றுக் கொள்வதாகக் கூறி உண்மையில் இஸ்லாம் என்பது அர்த்தம் நிறைந்த மார்க்கமேயாகும் என பாராட்டவும் தவறவில்லை.

இந்த சம்பவத்தை அவதானித்துக் கொண்டிருந்த சில இஸ்லாமிய சகோதரர்கள் எம் பக்கம் நெருங்கி வந்து மறுபடியும் அதன் விளக்கத்தை கேட்ட போது அவர் களுக்கும் அது ஒரு பாடமாக அமையலாயிற்று. பிறகு ரயில் போபாலை அடையும் வரை இடம் பெற்ற தஃலீம் தஃவத் போன்ற எமது நிகழ்ச்சிகள் அனைத்திலும் ஆர்வத்துடன் கலந்து கொண்டு பயன் தரும் பல பாடங்களை படித்துக்

கொள்ளக்கூடிய பாக்கியத்தையும் பெறலாயினர். அது அந்நிய சிநேகிதர்களுக்கும் ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த தவற வில்லை என்பது குறிப்பிட்டு கூறி வைக்க வேண்டிய ஒரு விடயமாகும்.

தமிழ்நாட்டின் நெல்லை ஜில்லாவில் ஒரு தடவை ஜமாஅத்தில் ஈடுபட்டிருந்த போது ஒரு சகோதரர் நாலைந்து நாட்கள் கடும் ஜுரத்தினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்ததால் தொழுகை நேரங்களில் உளுச் செய்ய முடியாத நிலைக்கு தள்ளப்பட்டார். எனவே தயம்மும் செய்ய வேண்டிய தேவை ஏற்படவே அதைப் பற்றிய விபரங்களை விளக்கிச் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

சுத்தம் செய்வதற்காக மண்ணை நாடுதல் என்பதே தயம்மும் என்பதின் அர்த்தமாகும்.

தண்ணீரை உபயோகித்தால் நோய் ஏற்படலாம் அல்லது அதிகமாகும் என்பதாலும் தண்ணீர் கிடைக்காத நேரத்திலும் உளுவுக்காகவும் கடமையான குளிப்பிற் காகவும் மண்ணைக் கொண்டு தயம்மும் செய்யலாம்.

ஒரு தயம்முமைக் கொண்டு ஒரு பர்ளை மாத்திரமே நிறைவேற்ற முடியும். ஆனால் பல சுன்னத்துகளை நிறைவேற்றலாம்.

தொழுகையை ஆகுமாக்கத் தேடுகிறேன் அல்லது முழுக்கிலிருந்து விடுபட தேடுகிறேன் என நிய்யத் செய்து இரு கைகளின் உள்ளங்கைகளைப் புழுதி கலந்த சுத்தமான மண்ணின் மீது அடித்து, இரு பின் கைகளையும் சேர்த்து உதறிவிட்டு இரு கைகளைக் கொண்டு முகம் முழுவதையும் தடவ வேண்டும். பிறகு மறுபடியும் மண்ணின் மீது இரு கைகளையும் அடித்து, முன்பு போல் உதறி விட்டு வலது கையை இடது கையின் முழங்கை

உட்பட தடவியதன் பின் இடது கையை வலது கையின் முழங்கை உட்பட தடவ வேண்டும்.

உளுவை முறிக்கும் காரியங்கள் ஏதாவது நடந்தாலும், நோயிலிருந்து சுகம் கிடைத்து விட்டாலும், தண்ணீர் கிடைத்து விட்டாலும், தயம்மும் செய்ய உண்டான நிபந்தனைகள் நீங்கி விட்டாலும் தயம்மும் முறிந்து விடும்.

முப்பத்தியேழு வருடங்களுக்கு (1970) முன் எனது முதலாவது டெல்லி பிரயாணத்தின் போது நடந்த ஒரு சம்பவம்.

மூன்று சில்லா வக்தை நிறைவு செய்து கொண்டு திரும்பி வருகையில் அறிமுகமான சில சிநேகிதர்களுடன் சம்பாசித்து விட்டு விடைபெறுகையில் அடியேனுடன் அந்த முழு வக்தின் போதும் இணைந்திருந்த கண்ணியத் திற்குரிய ஒரு ஆலிம் என்னை முஆனகா செய்து துஆச் செய்யலானார். அவர் ஓதியது என்ன துஆ என்பது எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. எனவே விளங்கிக் கொள்வதற்காக வேண்டி, தாங்கள் இப்போது என்ன சொன்னீர்கள் என்று கேட்க வேண்டியதாயிற்று.

அதற்கு அவர் பிறரை வழியனுப்பும் போது ஓதப்பட வேண்டிய சுன்னத்தான துஆவையே ஓதினேன் என்று கூறி

أَسْتَوْدِعُ اللّٰهَ دِيْنَكَ وَأَمَانَتَكَ
وَخَوَاتِيْمَ عَمَلِكَ

என்ற அந்த துஆவை மறுபடியும் கூறிய போது அடியேனுக்கு அது அன்று ஒரு பாடமாக அமையலாயிற்று.

''நான் உன்னுடைய தீனையும் உனது அமானிதத்தை யும் உன்னுடைய காரியாதிகளின் முடிவையும் அல்லாஹ் வின் பொறுப்பிலே ஒப்படைக்கிறேன்'' என்பதுவே அந்த துஆவின் அர்த்தமாகும்.

நடுத்தர வயதுடைய ஒரு குடும்பஸ்தர் அடியேனுடன் தொடர்ந்து நான்கைந்து மாதங்களாக மூன்று நாள் ஜமாஅத்தில் வந்து கொண்டிருந்தார். பக்குவமாக தனது நேர காலங்களை பயன்படுத்துவதில் அக்கறையுடன் கவனம் செலுத்துபவராக நடந்து கொண்ட அவர் அனேகமாக எல்லா நேரங்களிலும் ஏதோ கவலையால் பீடிக்கப்பட்ட மனிதராகவே காணப்பட்டார்.

விசாரித்து பார்த்த போது ஒன்றுமில்லை என்று கூறி மழுப்ப முயற்சித்தாலும் எமது வற்புறுத்தலை தொடர்ந்து கடன் தொல்லைகளால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் செய்தி தெரிய வந்தது. விடயம் வெளிச்சத்திற்கு வந்ததும் கொஞ்சம் வெட்கப்பட்டவராக தென்பட்டார்.

ஒரு சகோதர முஸ்லிமுடைய சிரமங்களை நீக்கி வைப்பதில் அக்கறை செலுத்துவது அடுத்த முஸ்லிம் களுடைய பொறுப்பு என்பதை உணர்ந்ததின் காரணத் தினால் அவருடைய விடயத்தில் எங்களால் இயன்றளவு ஏதாவது உதவி உபகாரத்திற்குண்டான ஏற்பாடுகளை செய்தாக வேண்டும் என்று எமக்குள் ஒரு முடிவை செய்து கொண்டோம்.

பின்னர் ஆறுதல் கூறி, கடனை அடைப்பதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள் என்று வினவிய போது, கடன் தந்தவர்கள் எவரும் இதுவரை அதனை திருப்பிக் கேட்டு வற்புறுத்தவில்லையானாலும் வாங்கிய கடனை திருப்பிக் கொடுத்து சீக்கிரம் அதிலிருந்து நிவாரணம் பெற்றாக வேண்டுமே என்ற கவலையே தன்னை சதா நேரமும் வாட்டி வதைத்துக் கொண்டிருப்பதாக முறையிட்ட அவர் கொஞ்சம் கொஞ்சமாக கொடுத்து வருவதாகவே கூறி கடனிலிருந்து முழுமையாக விடுபட்டு நிம்மதியை கண்டு கொள்ள துஆ செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

அப்போது எம்முடன் வந்திருந்த கண்ணியத்திற்குரிய ஒரு மௌலவி சாஹிப், கடனிலிருந்து விடுபட நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்திருக்கும் இரண்டு துஆக்களை சொல்லித் தாரட்டுமா என்று கேட்டதும், அவசியம் சொல்லித் தாருங்கள் என்று அவசரப்படுத்தவே கீழ்காணும் இரண்டு துஆக்களை சொல்லிக் காட்டி எழுதியும் கொடுத்ததுடன் நம்பிக்கையுடன் வழமையாக ஓதி வரும்படியும் கேட்டுக் கொண்டார்.

''யா அல்லாஹ்! கவலை துக்கம் ஏற்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். இயலாமை சோம்பல் ஏற்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். கோழைத்தனம் கஞ்சத்தனம் ஏற்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். இன்னும் கடன் சுமை மிகைப்பதை விட்டும் நல்லவர்களின் கோபம் ஏற்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்'' என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ اِنِّىْ اَعُوْذُ بِكَ مِنَ الْهَمِّ وَالْحُزْنِ وَاَعُوْذُ
بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَاَعُوْذُ بِكَ مِنَ الْبُخْلِ
وَالْجُبْنِ وَاَعُوْذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ وَقَهْرِ الرِّجَالِ

''யா அல்லாஹ்! ஹராமான ரிஸ்கை விட்டும் உன் ஹலாலான ரிஸ்கைக் கொண்டு போதுமாக்கி வைப்பாயாக. உன்னைத் தவிர பிறரிடம் தேவையாகுவதை விட்டும் உன் அருட்கொடையைக் கொண்டு எனக்கு செழிப்பை அருள்வாயாக'' என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ اكْفِنِىْ بِحَلَالِكَ وَعَنْ حَرَامِكَ
وَاَغْنِنِىْ بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ

ஆகியவைகளே அந்த இரண்டு துஆக்களுமாகும்.

அதனை பெற்றுக் கொண்ட அவர் அவைகளை உடனே பாடமிடத் தொடங்கி ஒவ்வொரு பர்ளுத் தொழுகைக்குப் பிறகு மாத்திரமல்லாது ளுஹா, வித்ரு, தஹஜ்ஜத் போன்ற நபிலான தொழுகைகளின் போதும் ஓதிவரும் பழக்கத்தை மேற் கொள்ளலானார்.

அல்ஹம்துலில்லாஹ், இது நடந்து ஒரு ஆறு மாதம் கழிந்த போது அவர் வாங்கியிருந்த கடன் தொகை முழுவதையும் திருப்பிக் கொடுக்க முடிந்ததுடன் அவரை மனநிம்மதியுடன் சந்தோஷமாக வாழ்ந்து வருவதையும் பார்க்க முடிந்தது.

இது அவருக்கு மாத்திரமல்லாது ஜமாஅத்தில் வந்திருந்த மற்றைய சகோதரர்களுக்கும் ஒரு பாடமாக அமையலாயிற்று.

இந்திய நாட்டின் உத்திரபிரதேசத்தில் பிஜ்னூர் என்ற பெயரில் ஒரு ஊர் உண்டு. அவ்வூரில் ஈமானுடைய உழைப் பில் சில்லா வக்தின் போது ஈடுபட்டிருந்த சமயம் ஒரு நாள் அஸர் தொழுகை முடிந்ததும் இடி மின்னலுடன் மழை பெய்யத் தொடங்கி இரவு பதினொரு மணி வரை விடாமல் பேய் மழை போல் தொடர்ந்து பெய்து கொண்டே இருந்தது.

பாதையெல்லாம் மழைநீர் நிரம்பி வெள்ளம் போல் காட்சியளித்ததுடன் நாங்கள் தங்கியிருந்த பள்ளிக்குள்ளும் மழைநீர் புகுந்து பெரும் அசௌகரியத்தை ஏற்படுத்தி கட்டுக்கடுங்காமல் நிலைமை மோசமடையத் தொடங்கிய போது ஜமாஅத்தில் வந்திருந்தவர்களுள் சிலர் உரத்த குரலில் கூழ்காணும் துஆவை ஓதத் தொடங்கினர்.

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا اَللّٰهُمَّ عَلَى الْاٰكَامِ وَالْاٰجَامِ وَالظِّرَابِ وَالْاَوْدِيَةِ وَمَنَابِتِ الشَّجَرِ

பொருள் : யா அல்லாஹ்! இந்த மழையை அக்கம் பக்கத்தில் பொழிய வைப்பாயாக, எங்கள் மீது பெய்ய வேண்டாம். யா அல்லாஹ்! இம்மழையை திட்டுக்களின் மீதும் வனங்களின் மீதும் பாறைகளின் மீதும் ஓடைகளின் மீதும் மரங்கள் உற்பத்தியாகும் இடங்களின் மீதும் பெய்ய வைப்பாயாக.

இது அளவுக்கு அதிகமாக மழை பெய்து ஆபத்தான விளைவுகளை ஏற்படுத்தும் நிலைமை உருவானால் அதிலிருந்து பாதுகாப்புப் பெரும் பொருட்டு அல்லாஹ்வின் உதவியை நாடி ஓத வேண்டிய துஆவாகும்.

என்ன ஆச்சரியம்! பத்து நிமிடம்தான் சென்றிருக்கும், மழை தணியத் தொடங்கி சிறிது நேரத்தில் முற்றாக ஓய்ந்து விட்டது. எனினும் ஜமாஅத்தினர் தொடர்ந்தும் அதனை ஓதிக் கொண்டே இருந்தனர். சிறிது நேரத்திற்குள் பள்ளிக்குள் புகுந்திருந்த மழைநீர் வெளியேறத் தொடங்கி அல்ஹம்துலில்லாஹ் ஒரு மணி நேரத்திற்குள் நிலைமை முழுமையாக சீராகி விட்டது.

அந்த துஆவை ஓதாதவர்களுள் அடியேனும் ஒருவனாக இருந்த நிலையில் பலருக்கு அன்று அது படித்துக் கொள்ள முடிந்த ஒரு பாடமாக அமைந்தது இன்றும் என் ஞாபகத் தில் இருந்து கொண்டிருக்கிறது.

அத்துடன் இடி மின்னலின் கெடுதியிலிருந்து பாதுகாவல் பெறுவதற்காக அந்த சமயத்தில் ஓதிய ‘‘யா அல்லாஹ்! எங்களை உனது கோபத்தால் மரிக்கச் செய்திடாதே. இன்னும் அழித்து விடாதே. அதற்கு முன் எங்களுக்கு சுகத்தை தருவாயாக’’ என்ற பொருள் கொண்ட

اَللّٰهُمَّ لَا تَقْتُلْنَا بِغَضَبِكَ وَلَا تُهْلِكْنَا
بِعَذَابِكَ وَعَافِنَا قَبْلَ ذٰلِكَ

என்ற துஆவையும் பாடமாக்கிக் கொண்டோம்.

இறுதியாக அடியேனுடைய சென்ற வருட (2006) சில்லா ஜமாஅத்தில் இணைந்து வந்திருந்த கண்ணியத்திற்குரிய ஒரு ஆலிம் எனது நினைவை தொட்டுப் பார்த்து உசுப்பி விடுவதை உணர்வதால், வளர்ந்து வரும் ஆலிம்களுக்கு அழகியதோர் முன்மாதிரியை அவரது அணுகுமுறையிலும் செயல் வடிவிலும் காணக் கிடைத்ததை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளும் வகையில் எனது அபிமானத்திற்குரியவராகி விட்ட அவரைப் பற்றியும் அந்த ஜமாஅத்தைப் பற்றியும் சில வார்த்தைகளை குறிப்பிடுவதில் பெருமிதம் அடைகிறேன்.

வளம் பொருந்திய வாலிப வயதில் வலம் வந்து கொண்டிருக்கும் அவரின் அறிவு முதிர்ச்சியையும், ஆற்றல் மிக்க செயல் திறனையும், பண்பும் பரிவும் பக்குவமும் நிறைந்த குணாதிசயங்களையும் பயன்படுத்தி எமது ஜமாஅத்தில் வந்திருந்தவர்கள் அதிக அளவில் பலன் பெறக்கூடிய வாய்ப்பினை பெற்றுக் கொண்டமையை அவர்கள் அனைவரும் பெரும் பாக்கியமாகவே கருதினர்.

ஜமாஅத்தில் புறப்பட்டுச் செல்லும் காலங்களில் இலங்கையை பொறுத்த வரையில் பொதுவாக பகல் போஜனத்திற்கும் அஸர் தொழுகைக்கும் இடைப்பட்ட நேரம் சிறிய ஒரு இடைவெளியாகவே இருப்பதால் அந்நேரத்தை தனிப்பட்ட சொந்த அமல்களுக்காகவும் ஓய்வு பெறுவதற்காகவும் ஒதுக்கப்படக்கூடிய வகையிலேயே வழக்கத்தில் பழக்கப்பட்டு வருகிறது.

ஆனால் எமது அந்த சில்லாவின் பிரயாண காலத்தில் ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட அந்த நேரத்தை வந்தவர்கள் அனைவரும் மிகப்பெரும் பிரயோஜனங்களை அடைந்து கொள்ளும் வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டமை கண்ணியத்திற்குரிய அந்த ஆலிமுடைய அர்ப்பணிப்புக்கு கிடைத்த பரிசாகவே கருத வேண்டி இருக்கிறது.

சில பாடத்திட்டத்தின் அடிப்படையில் மதரஸாக்களில் மாணவர்களுக்கு எவ்வாறு பாடங்கள் போதிக்கப்படுகின்றதோ அதே அடிப்படையில் ஜமாஅத்தில் வந்தவர்களை வட்டமாக உட்கார வைத்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பாடத்தை கவனத்திற்கெடுத்து அதைப் பற்றிய விபரங்களை விளக்கப்படுத்திய போது, அதன் மூலம் ஒவ்வொருவரும் ஒரு விடயத்தைப் பற்றிய தெளிவையாவது பெறக்கூடியவர்களாக ஆனதை எண்ணிப் பார்க்கையில் அவ்வாறான ஒரு முயற்சியின் அவசியத்தை உணர முடிந்தது.

ஜமாஅத்தினரின் அன்பான வேண்டுகோளின் பேரிலும், பொறுப்பாக சென்றிருந்த அடியேனுடைய அனுமதியை பெற்றுமே அவ்வாறு அவர் செயலாற்றக் கூடியவராக இருந்தார் என்பதும் குறிப்பிட்டு கூறி வைக்க வேண்டிய ஒரு செய்தியாகும்.

இதில் கலந்து கொண்ட அனைவரும் வழமையாக தொழுது வரக்கூடியவர்களும் குர்ஆன் ஓதி வரக்கூடியவர்களுமே. எனினும் தொழுகை குர்ஆன் ஓதல் பற்றிய விபரங்களை விசாரித்தறிய முற்பட்ட போதும், அது சம்பந்தமான விரிவான விபரங்களை எடுத்துச் சொல்வதை கேட்கும் நிகழ்வினை சந்தித்த போதும்தான் அவர்களிடம் ஒளிந்திருந்த குறைபாடுகள் வெளிச்சத்திற்கு வர ஆரம்பித்தன.

இந்த குறைபாடுகளும், அவைகளை நிவர்த்தி செய்து திருத்திக் கொள்வதற்கு கிடைக்கப் பெற்ற எளிமையான விளக்கங்களும், மேலதிக அமல்களின் விபரங்களை தெரிந்து கொள்ள முடிந்ததாலுமே சில்லா வக்து பூராவும் தொடர்ந்து அந்த நிகழ்ச்சி தினமும் உற்சாகத்துடன் நடந்து வர காரணமாக அமைந்தது எனலாம். அந்த நிகழ்ச்சியின் மூலம் ஜமாஅத்தினர் அடைந்து கொண்ட பலாபலன்களில்

மாதிரிக்காக சில விபரங்கள் மாத்திரம் இங்கு இடம் பெறுகிறது.

தொழுகையில் ''அல்லாஹு அக்பர்'' என்ற தக்பீர் தஹ்ரீமாவில் ஆரம்பித்து நிலையில் நிற்பது, அதில் கால்கள் இரண்டையும் ஒழுங்காக அமைத்து வைத்தல், குறிப்பாக ஜமாஅத் தொழுகையின் போது பக்கத்தில் நிற்பவர்களுக்கு இடையூறு செய்யாத வகையில் ஒரு ஜான் இடைவெளிக் கிடையில் இரண்டு கால்களையும் அமைத்து வைத்தல், ருகூஃ ஸுஜூது இவ்விரு கட்டங்களிலும் கை விரல்களை முறையே விரித்தும் சேர்த்தும் வைத்தல், ருகூவிலிருந்து நிமிரும் போது

سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهُ

(அல்லாஹ் தன்னை புகழ்பவரின் புகழை செவி மடுத்தான்) எனக் கூறி இரு கைகளையும் காது சோனை வரை உயர்த்தி நிமிர்ந்து நிலைக்கு வந்ததும் இரு கைகளையும் தொங்கவிட்டவாறு ''எங்கள் இரட்சகனே! உனக்கே எல்லாப் புகழும் உரியது. வானங்கள் பூமி நிறையவும் நீ சிருஷ்டிக்க நாடியவைகளின் புகழ் யாவும் உனக்கே உரியது'' என்ற பொருள் கொண்ட

رَبَّنَا لَكَ الْحَمْدُ مِلْءَ السَّمٰوٰتِ وَمِلْءَ الْاَرْضِ
وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ

என்பதை ஓதிக் கொள்ளல், இரண்டு ஸுஜூதுக்கும் இடையில் நடு இருப்பில் இருக்கும் போது ஓத வேண்டிய

رَبِّ اغْفِرْلِي وَارْحَمْنِي وَاجْبُرْنِي وَارْفَعْنِي
وَارْزُقْنِي وَاهْدِنِي وَعَافِنِي وَاعْفُ عَنِّي

என்ற துஆ, அத்தஹிய்யாத்தை அர்த்தம் விள
ஒவ்வொரு வசனம் வசனமாக நிறுத்தி நிறுத்தி ஓதல்

(1) اَلتَّحِيَّاتُ الْمُبَارَكَاتُ الصَّلَوَاتُ الطَّيِّبَاتُ لِلّٰهِ

(2) اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ

(3) اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ

(4) اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللّٰهِ

(5) اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ

தொடர்ந்து ஓத வேண்டிய

وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى
اٰلِ اِبْرَاهِيْمَ وَبَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ
كَمَا بَارَكْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ
اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

என்ற ஸலவாத்துடன் சேர்த்து ஓத வேண்டிய

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ مَا قَدَّمْتُ وَمَآ اَخَّرْتُ وَمَا اَسْرَرْتُ
وَمَآ اَعْلَنْتُ وَمَآ اَسْرَفْتُ وَمَآ اَنْتَ اَعْلَمُ بِهٖ
مِنِّيْ اَنْتَ الْمُقَدِّمُ وَاَنْتَ الْمُؤَخِّرُ لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ
سُبْحَانَكَ اِنِّيْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ -
اَللّٰهُمَّ اِنِّيْٓ اَعُوْذُبِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ وَمِنْ
عَذَابِ النَّارِ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ وَمِنْ
فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ اَللّٰهُمَّ اِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ

ظُلْمًا كَثِيْرًا كَبِيْرًا وَّلَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّآ اَنْتَ
فَاغْفِرْ لِيْ مَغْفِرَةً مِّنْ عِنْدِ وَارْحَمْنِيْ اِنَّكَ اَنْتَ
الْغَفُوْرُ الرَّحِيْمُ ۝

என்ற துஆவை பாடமாக்க வைத்து, ஸலாம் கொடுத்து
தொழுகையை முடித்ததும் இஸ்திஃபார், மற்றும்
தஸ்பீஹாத்துகளுடைய விபரங்கள் போன்ற தொழுகையில்
ஆரம்பம் முதல் இறுதி வரை இடம் பெறும் சிறிய பெரிய
அனைத்து விடயங்களையும் தெளிவுபட விளக்கப்படுத்தி,
பிரத்தியேகமான அமைப்பில் செயல்படுத்த வைத்து
பயிற்சியளித்ததுடன், ஒவ்வொருவரிடத்திலும் அல்குர்ஆனை
கைகளில் கொடுத்து ஓத வைத்து அதில் கண்ட தவறு
களை திருத்திக் கொடுத்து தஜ்வித் முறையுடன் தர்தீபு
களை பேணி ஓதும் முறையை ஓதப் பழக்கியதும், இப்படி
யாக அலுப்பில்லாமல் அர்ப்பணிப்புடன் செயலாற்றிய அவரது
செயல் முறையானது நிச்சயமாக ஆலிம்களுக்கு, குறிப்பாக
வக்து கொடுத்து நேரங்களை ஒதுக்கி அல்லாஹ்வின்
பாதையில் வரக்கூடிய கண்ணியத்திற்குரிய ஆலிம்களுக்
கோர் உதாரணமாக இருப்பதை காண முடிந்தது.

இறுதியாக, அந்த பிரயாணத்தின் போது அவரின்
மூலம் தெரிய வந்த அரபு நாட்டின் அருமையான ஒரு
கார்குஸாரியில் சொல்லப்பட்ட ஒரு ஹதீஸை அமலில்
கொண்டு வரும் ஆர்வத்தை ஏற்பட வைத்து அல்லாஹ்வின்
கிருபையால் அன்று முதல் தொடர்ந்து அமல் செய்து
இன்பத்தை கண்டு வரும் பாக்கியத்தைத் தந்த பாடத்தை
இடம் பெறச் செய்து இணையில்லா இறையருளால்
தொடங்கிய சிறிய நூலை இனிதாய் நிறைவு செய்து
கொள்வதுடன், மேலே குறிப்பிட்ட அரபு நாட்டின் அருமை
யான அந்த கார்குஸாரி அடியேன் எழுதிக் கொண்டிருக்கும்

''அல்லாஹ்வின் பாதையில் கண்டதும் கேட்டதும் (இரண்டாம் பாகம்) என்ற நூலில் இன்ஷா அல்லாஹ் இடம் பெற இருக்கிறது என்ற செய்தியையும் சொல்லி வைக்க விரும்புகிறேன்.

عَنْ اَبِیْ هُرَیْرَةَ رض قَالَ: قَالَ النَّبِیُّ ﷺ كَلِمَتَانِ خَفِيْفَتَانِ عَلَى اللِسَانِ ثَقِيْلَتَانِ فِى الْمِيْزَانِ حَبِيْبَتَانِ اِلَى الرَّحْمٰنِ سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ سُبْحَانَ اللّٰهِ الْعَظِيْمِ رواه البخارى ومسلم والترمذى والنسائى وابن ماجة كذافى الترغيب

அபூ ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிப்பதாவது, இரண்டு கலிமாக்கள் நாவிற்கு மிக இலேசானவையாகவும், தராசில் மிகக் கனமுடையவையாகவும் ரஹ்மானாகிய அல்லாஹ்வுக்கு மிக நேசமுள்ளவையாகவும் இருக்கின்றன. அவை :

سُبْحَانَ اللّٰهِ وَبِحَمْدِهٖ

''சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி

سُبْحَانَ اللّٰهِ الْعَظِيْمِ

சுப்ஹானல்லாஹில் அளீம் என்பவையாகும்''

என ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

நூற்கள் : புஹாரி, முஸ்லிம்

கிடைக்குமிடம்
0451 -
லி குதுப்கானா,
வெளியிடுபவர் & விற்பனை
பேகம்பூர் - Po
டுக்கல் - 624 002